ஓம் தத் சத்

பரப் பிரஹ்மணே நம;

# திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி.

## (முப் பது புகழ்ப் பாச் சுவைப் பூங் கொத்து)

அஹம் பிரஹ்மாஸ்மி.

அயம் ஆத்மா பிரஹ்மம்.



ப்ரஜ் ஞானம் ப்ரஹ்மம்.

தத் த்வ மசி.

இயற்றியவர் :


திருப் பூ வணம், வேதாந்த மடம்,

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்


விலை ரூபாய் கால்.

திரு வை யா று,
பண்டித, சித. நாராயண சுவாமிகள் இயற்றியன.

கோவிலூர் வீரேசக் கோமா னடிபணிந்து,
நாவலர்கொண் டாடுகின்ற நாவலனுய்ப்-பூவணத்தில்,
வேதாந்த தேசிகனுய் வீற்றிருக்கு மெய்ஞ்ஞான,
சாதாங் தவகே சரி.

காசிகா நந்தன் கணபதிமேற் செய்பதிகத்,
தாசயங்கள் யாவு மறிவதற்கு—மாசிலுரை,
நுந்தா வொளியை நுவலப் பணிகுவனத்,
தந்தா வளத்தினலத் தாள்.

நல்லமுநி காசிகா நந்த னயந்துரைத்த,
தில்லைக்கோ விந்தர் திருப்பதிகம்—எல்லிடவே,
வந்தித்துச் சிந்துரவாய் மன்னைநுந் தாவொளியால்,
சிந்தித் துரைப்பல்பொருள் தேர்ந்து.

---

மூன்று தோத்திரங்கள்:

1. திருப் பூ வணம், வேதாந்த மடம், கணபதி கவி 10
2. மதுரை, பொன் தாமரைக் கரை, விபூதி கணபதி கவி 10
3. தில்லை, கோவிந்த ராஜப் பெருமாள் கவி 10

---

24. பேத திக்காரம் - சத் கிரியை உரை. சமஸ்கிருத மொழி [பெயர்ப்பு.
25. சித்தாந்த லேச சார சங்கிரகம், வசநம் (56) மத விசாரம் சமஸ்கிருத மொழி பெயர்ப்பு.
26. பிரபோத சுதாகரம், சுலோகம் பத உரை (வேதாந்தம்)
27. வைசேஷிக நியாய சங்கிரகம், பிரமேயம் பூர்வபாகம் 161, பிரமாணம் உத்தர பாகம் 239 ஆக, 400 நியாயம்.
28. நாநா ஜீவ வாதக் கட்டளையின் சாரமும், சக்தி விவேசநமும், [வசநம்.
29. கைவல்ய நவ நீதம் - கோவிலூர் மடம் அருணசல ஞாந தேசிக சுவாமிகள் பத சார உரை.
30. மகாத்ம சரிதாமிருதம் வசநம்.
31. பட்டினத்தார் பாடல் உரை.

काशिकानन्द - ज्ञानाचार्य - स्वामिन :,

वेदान्त मठ :, तिरुप्पूवणम्.



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்.
வேதாந்த மடம், திருப் பூ வணம்.

Kasikananda Gnanacharya Swamigal,
Vedanta Matam, Tiruppuvanam.

श्री काशिकानन्द - ज्ञानाचार्य स्वामिन : वेदान्त मठ :, तिरुप्पूवणम्.

ஸ்ரீகாசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், வேதாந்த மடம், திருப் பூ வணம்



तिरुवारूर् १९५९, श्री जकत् गुरु शंकराचार्य वर्याः शृंग गिरी.

திரு வாரூர் 1959, ஸ்ரீ ஜகத் குரு சங்கராச்சார்ய வர்யர், சிருங்க கிரி.



श्री गण पति – கண பதி.



दक्षिण शिर शयन श्री तिल्लै गोविन्द राज:

தென் தலைப் பள்ளி, தில்லைக் கோவிந்த ராஜர்.

உ சிவமயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

திருப் பூ வணம், வேதாந்த மட ஸ்தாபகர்,

பர சமய கோளரியார்,

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்**

**அவர்கள் இயற்றிய**

# திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி.

## (முப் பது புகழ்ப் பாச் சுவைப் பூங் கொத்து.)

*அகம் பிரஹ்மாஸ்மி.*

அயம் ஆத்மா பிரஹ்மம்.



பிரஜ் ஞாநம் பிரஹ்மம்.

*தத் த்வ மசி.*

இதற்கு,

திரு வை யாறு, அறு பத்து மூவர் மடாதிபதி,
சிதம்பரம், கோ. சித மடம், ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக
சுவாமிக ளவர்கள் மாணுக்கர், மதுரை, தமிழ்ச் சங்கத்து
பண்டித, நாராயண சுவாமிகள் அவர்கள் இயற்றிய

**நுந்தா வொளி (நித்திய பிரகாசம்) என்னும்**
**பத உரை விசேட உரை.**

இவை இரண்டும்
மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றன.

காபிரைட்] **1959** [விலை நயா பைசா **25**

உ

## நூன் முகம்.

உலக மாந்தர்கள் நன்மை பெற கருமம் பக்தி ஞானம் என மூன்று வழிகள் உண்டு, அவற்றுள், கலியில் பக்தி மார்க்கம் மிகச் சிறந்த தாகும். அவற்றுள்ளும், வாசிக சகுண வஸ்து தோத்திரம் உயர் வாம். இவ்வித தோத்திரத்தை, மாணிக்க வாசகர், திரு ஞான சம்பந்தர், சுந்தரர், திரு நாவுக் கரசர், அபிராமி பட்டர், வட லூர் ராம லிங்க சுவாமிகள், ஆழ்வார் முதலிய பெரியோர்கள் செய் திருக்கின்றார்கள்.

அது போன்றே, பஞ்ச மூர்த்தி தோத்திரங்கள், அதாவது! 1. திருப் பூ வண மடத்துக் கண பதி, 2. மதுரை, பொன் தாம ரைக் கரை—விபூதிக் கண பதி, 3. தேவி கோட்டை தண்டாயுத பாணி, 4. குன்றக் குடி குமர வேள், 5 மதுரை தண்ட பாணி, 6. பழநி தண்ட பாணி, 7. திருச் செந்தூர் குமர வேள், 8. திருப் பூ வணம்—பூ வண்ண நாதர், 9. மதுரை — சொக்க நாதர், 10. கோயி லூர் கொற்ற வாள் ஈசர், 11. சிதம்பரம் நட ராஜர், 12. திருப் பூ வணம்—சௌந்தரிய நாயகி, 13. மதுரை—மீனாக்ஷி அம்பிகை, 14. திரு அண்ணாமலை உண்ணா முலை அம்பிகை, 15 தில்லை கோவிந்த ராஜப் பெருமாள், 16. சிக்கல் உகந்த லிங்க ஞான தேசிகர், 17. கோவி லூர் முக்தி ராம லிங்க ஞான தேசிகர், 18. திருக் களர் வீர சேகர ஞான தேசிகர் என்னும் பதின் எண் மூர்த்திகள் பேரிலும் எழு சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தப் பாவில் நாம் செய்திருக்கின்றோம்.

அதற்குச் "சார்த் சதகத் தோத்ர ரச மஞ்சரி" என்றும், "திரிம் சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி" என்றும் பெயர் வைத்து, ஸ்ரீ. ஷண்முகாநந்த ஐயா இயற்றிய பரிமள தீப உரையுடனும், திரு வை யாறு அறு பத்து மூவர் மடம் மடாதிபதி—சங்கத்து பண்டித, நாராயண சுவாமிக ளியற்றிய நுந்தா ஒளி (நித்யப் பிரகாசம்) என் னும் உரையுடனும் வெளியிடுகின்றோம்.

இதனை அன்புடையோர் யாவரும் பார்த்து சகுண வத்துவில் அன்புற்று திளைத்து இன்புறு மாறு விரும்புகின்றம்.

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,
வேதாந்த மடம், திருப் பூ வணம்.

## திருப் பூவண மடத்துக் கணபதி தோத்திரமும், நுந்தா வொளி (நித்தியப் பிரகாசம்) என்னும் உரையும்.

சீர்தந்த வீதி தோறும்வீற் றருளித்
திகழன்பர் அருச்சிக்கப் பெற்று,
ஆர்தந்த இனிய மோதகம் அயின்றே
அகமகிழ்ந் தடியவர்க் கருள்வான்,
பார்தந்த கவிகள் புகழ்வைகை காவும்
பார்ப்பவர் மகிழ்வுற மேவும்,
கார்தந்த மாடப் பூவண மடத்துக்
கணபதி நினதடி தொழுவாம்.

(இ-ள்) சீர் தந்த வீதி தோறும் - விழுப்ப மமைந்த தெருக்கள் ஒவ் வொன்றிலும், வீற்றிருந் தருளி-இணை யின்றி யெழுந்தருளி, திக ழன்பர் அருச்சிக்கப் பெற்று-(குற்ற மின்றி) விளங்கு மன்பர்களாற் பூசிக்கப் பெற்று, ஆர் தந்த இனிய மோதகம் அயின்று - (சேர வேண்டிய பண்டங்க ளெல்லாம்) நிறையப் பெற்றிருத்தலால் சுவையா லினிமையான மோதகத்தை (அவ் வன்பர்கள் படைக்க) உட் கொண்டு, அக மகிழ்ந்து-(பூசிக்கப் பெற்றமையா லும், உட்கொண்டமையாலும்) மன மகிழ்ந்து. அடியவர்க்கு அருள்வான்-(அவ் வன்பர்க ளாகிய) அடியவர்களுக் கருள் செய்பவ னாகிய, பார் தந்த கவிகள் புகழ் வைகை காவும்-பூமி தேவியானவள் தன் தவப் பய னாகத் தந்த பாவலர்க ளாலே புகழப் பெற்ற வைகை யாறும். (அதன் வளத்தால் பரவி யோங்கிய) சோலையும், பார்ப்பவர் மகிழ்வுற மேவும்-கண்டவர் களிக்கப் பொருந்தப் பெறுவதும், கார் தந்த மாட-நீ ருண்ட மேகங்கள் தவழப் பெறு மாடங்களை யுடையதும் (ஆன), பூ வண மடத்துக் கணபதி - திருப் பூவணத்தின்கண் ணமைந்த வேதாந்த மடத்தி லெழுந்தருளி

யிருக்கின்ற கணபதியே, நின தடி தொழுவாம்-தேவரீருடைய திருவடியை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோமாக.
(எ-று)

(வி-ரை) அடியவர்க் கருள்வா னாகிய கணபதி எனக் கூட்டுக. இறைவனை வழிபடுங் கருத்துடையார் தங்கும் வீதியாதலிற், "சீர் தந்த வீதி" என அது சிறப்பிக்கப் பெற்றது. மெய் யன்பர், 'திக ழன்ப' ரெனச் சிறப்பிக்கப் பெற்றனர்; பொய் யன்பு என்றும் விளங்கா தழியு மாதலின். பாவலர், உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற் புலவர், (புறநானூறு) ஆதலின், 'பார் தந்த கவிகள்' எனப் புகழப்பட்டனர். என்று நீ ரருது மக்களை யின்புறுத்தலின் வையை, "வையை யென்னும் பொய்யாக் குலக் கொடி" (பரிபாடல்) எனப் பாவலராற் புகழப் பெறுகின்றது, ஆதலின், அது, "கவிகள் புகழ் வையை" எனப்பட்டது. 'தொழுதல்' வினை கைகளுக்கே யுரிய தென்பது, "கைகாள் கூப்பித் தொழீர்" (நாவரையர்) என்பது முதலியவற்றால் அறியப்படினும், "மன மொழி மெய்களிற் றெரழு தவ னருளால்." (சங்கர நமச் சிவாயர்), "கற்றத னாலாய பய னென்கொல் வாலறிவ, னற்றா டொழாஅ ரெனின்," (குறள் 1-2) என்பன முதலியவற்றால், மற்றைய வுறுப்புக்களுக்கும், மற்றைய கரணங்களுக்கு மவ் வினை வழு வமைதியாக வரும் என்பது துணியப்படுதலின், ஈண்டுந் 'தொழுவாம்' என முக் கரணங்களுக்கு முரிய வினை யாகக் கொள்ளப்பட்டுள்ளது என்க.
1

2. தீவணம் ஆகும் இறைவனல் உருவம்
எனுங்கவி ஞன்றன துரைதான்,
சாவணம் ஆகா திருப்பதற் காகச்
சார்ந்துபாண் டியவர சாகத்,
தேவணங் காட்டிச் சிவபத மளித்த
சிறப்புறு பொழில்நதி சூழும்,
பூவண மடத்தில் வாழ்கண பதிநின்
புநிததா மரையடி தொழுவாம்.



(இ-ள்) இறைவன் நல் உருவம்-இறைவனது நல்ல திருமேனி நிறம், தீவண மாகும் எனும்-தீயி லிட்ட இரும்பி னிறம் போலச் செம்மை யாக இருக்கு மென்ற, கவிஞன் தனது உரை தான்-பாவலனது மொழியானது, சா வணம் ஆகாது இருப்பதற் காக-பொய்யா மொழி யாக இருக்கும் படி, பாண்டிய அர சாகச் சார்ந்து-(இறைவன்) பாண்டிய அரச னாக வந்து, தே வணங் காட்டி-(தனது) தெய்வ ஒளி யுருவத்தினைக் காட்டி, சிவ பதம் அளித்த - (அடியவர் கட்குச்) சாலோக சாமீப சாரூப சாயுச்சிய மாகிய சிவ பதங்களைக் கொடுத்த, சிறப்புறும்-(ஈய் மெடுப்பு மில்லாத) சிறப் பாகிய தன்மை பொருந்துகின்ற, பொழில் நதி சூழும்-சோலைகளும், வைகை யாறம் சூழ்ந்து விளங்கும். பூவணம் - திருப் பூவண மென்னுந் தலத்தி (லமைந்த). மடத்தில் வாழ் - வேதாந்த மடாலயத்தின்கண் ணெழுந் தருளியிருக்கின்ற, கணபதி - கணபதியே. நின் - தேவரீ ருடைய, புநித தாமரை யடி - தூய்மை யான தாமரை மலர் போன்ற திரு வடிகளை, தொழுவாம் - (முக் கரணங் களாலும்) வழிபடுவோமாக.
(எ-று)

(வி-ரை) தீ வண்ணம்-தீயினு லேற்பட்ட வண்ணம். 'பொற் குடம்' என்பது போல மூன்றும் வேற்றுமை யுருபும் பயனுந் தொக்க தொகை யாகும். 'சிறப்புறு' என்னு மடையை பூவணம் என்பதற் கடை யாக்குக. "பாண்டிய அரசாகச் சார்ந்து ..... சிவபத மளித்தமை" மதுரைக்கண் நிகழ்ந்ததாயினும், அங்கும் பூவணத்து முறை பெருமான் ஒருவ னாதலினாலும், பாண்டிய நாட்டின்கண் இரண்டு முள வாதலினாலும், திருப் பூவணத்து நிகழ்ந்த தாக வுரைத்தார். திருப் பூ வணத்தி நிகழ்ந்த தாகக் கூறு வாரும் உளர் அங்ஙன முரைத்தல் அன்பர்களின் மர பாகு மென்க. மற்றைய மலர்கள் போல காம ஜனக மாகாமையால் "தாமரை" "புநித தாமரை" எனப் பட்டது. கம்பரும் தாமரை மலரை "மை யறு மலரி னீங்கி" என வுரைத்திருத்தல் காண்க இனி 'அடி'

வழிபடுவார்க்குக் காம வெகுளி மயக்க மென்னு முக்குற்றங்களையு நீக்கிப் பிறவிப் பிணியையு மறுத்தலின். 'புநித' என்னு மடை யதனையே யடுக்கு மெனினு மாம். உவமைக்கும், பொருளுக்கு மேற்ற அடை யெனல் சாலும். அடியத்தகைய தென்பதை வலியுறுத்த, "மறு பிறப் பறுக்கும் மாசில் சே வடி' (பரிபாடல்), "நற்றாள்" (வள்ளுவர்) எனப் பிறருங் கூறுதல் காண்க. "தீவண மாகு மிறைவ னல் லுருவ மெனுங் கவிஞன்றனதுரை தான்" என்பது, "உலையிலிட்ட, இருப்பு வண்ண மென்றாலோ வாமாம், திருப்பூ வணநாதர் திறம்." என்ற பாவை யுட்கொண் டெழுந்ததாகும். 2

3. காவல னாக வுறுப்புக டோறுங்
காப்புடைக் காவல னாகக்,
கூவுவார் கூவ றமைச்செவிக் கணியாக்
கொண்டிடுங் கருணை வா ரிதியாய்க்,
கேவல மருளிக் கேலமே செய்யும்
கிண்கிணி யொலிகளே கிளம்பப்,
பூவண மடத்தில் வாழ்கண பதிநின
புநிததா மரையடி தொழுவாம்.

(இ-ள்) உறுப்புகள் தோறும் காவலன் ஆக-ஒவ்வொரு அவயவங்களிலும் தங்கி (அவற்றைத் தீய வழிகளிற் செல்லாமலும். அவற்றிற்கு யாதொரு இடையூறும் புகாமலும்,) காக்கின்ற காவற் றெய்வ மாகவும், காப்புடைக் காவலன் ஆக-உலகங்க ளெல்லாவற்றையு நிலை நிறுத்துந் தலைவ னாகவும்(இருத்தலின்), கூவுவார் கூவல்தமை-முறை வேண்டியுங், குறை யிரந்துங், கூவுகின்றவரின் அழைப் பொலியை, அணி யாக் கொண்டிடும்-அணி கல மாகக் கொண்டிருக்கின்ற, கருணை வாரிதியாய்-அருட் பெருங் கட லாகி, கேவலம் அருளி-(அன்பர்கட்கு) வீடுபேற்றினை யளித்து, கேலம் செய்யும் - (அன்பர்கட்கு வீடுபேற்றினை யீத் துவக்கு முவகை மகிழ்ச்சியினால்) திரு நடந மாகிய திரு விளையாடலைச் செய்கின்ற. கிண்கிணி ஒலி கிளம்ப-அந் நடநத்தா லுண்டாகின்ற கிண்கிணிச் சதங்கை ஒலி எழும்பி ஒலிக்க, பூவண மடத்தில்-திருப் பூவண வேதாந்த மடாலயத்தின்கண், வாழ் கணபதி-எழுந்தருளியிருக்கின்ற கணபதியே, நின்-தேவரீ ருடைய, புநித தாமரை அடி-தூய்மையான தாமரை மலர் போன்ற திரு வடிகளை, தொழுவாம் - (முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)



(வி-ரை) அணியாக் கொண்டிடுங் கணபதி; அருளி, செய்யுங் கணபதி; கிளம்ப வாழ் கணபதி, எனக் கூட்டிப் பொருள் கொள்க.

கூவுவார் எனப் பாடங் கொள்ளாது, 'கூவலர்' எனப் பாடங் கொண்டு கூவ நூல் வல்லார் எனப் பொருளுரைப்பினு மமையும் என்பது நூ லாசிரியர் கருத்து. விநாயகராய இறைவன் உலகங்களைப் படைத்து வாளா விடாது, சிறப்பாகவும், பொதுவாகவும், காக்கின்றான் என்பார், உறுப்புகள்...காவல னாக 'எனவும்', 'காப்புடைக் காவல னாக' எனவும் கூறினர் என்க. இனிக் காப்புடைக் காவலன் என்பதறகு, உலகினைப் படைத்துக் காத்தலோடு நில்லாது, காத்தலை நீக்கி யழித்தலையுஞ் செய்யு மிறைவன் எனப் பொருளுரைத்து முத் தொழிற்கு முரிய முழு முதற் கடவு ளெனக் குறிப்பித்தனர் என்றலும் ஒன்று. இப் பொருட்டு, காப்பு உடை காவலன் எனப் பிரிக்க. காவல னென்பது தலைவ னென்னும் பொருளி னின்றது உலகங் காவலர், முறை வேண்டுவார்க்கும், குறை யிரப்பவர்க்குங் காட்சிக் கெளியராய், அவர் முறை வேண்டு மொழிக்கும், குறை யிரப்பு மொழிக்குந் தஞ் செவி புகுத்தியிருப்பராகலின், "கூவ றமைச் செவிக் கணியாக் கொண்டிடும்" என்றனர். 3

4. தூவண முறுநற் றாமரை யாற்குந்
துளவனார் உருத்திரர் தமக்கும்,
தேவணி குருவாய்ச் சிருட்டியா தியசெய்
திறலினை முறையினில் உதவிக்,

**கோவணங் கொண்டிங் காகுவின் மீது**
**குலவிடுங் கோலம துடனே,**
**பூவண மடத்தில் வாழ்கண பதிநின்**
**புநிததா மரையடி தொழுவாம்.**

(இ-ள்) தூ வணம் உறும்-தூய தன்மை பொருந்திய, நல் தாமரையாற்கும் - நல்ல செந் தாமரை மலரின்கண் ணெழுந்தருளியிருக்கின்ற பிரமனுக்கும், துளவனார்-துளவ மாலையை யணிகின்ற திருமால், உருத்திரர் தமக்கும்-உருத்திரர் ஆகிய இவர்களுக்கும், தே வணி குரு வாய்-தெய்வத் தன்மை பொருந்திய ஆசாரிய ராகி, சிருட்டி யாதிய செய்-படைப்பு முதலிய முத் தொழிலையுஞ் செய்கின்ற, திறலினை-ஆற்றலை, முறையினில் உதவி-வரிசை யாகப் பக்குவ மறிந்து ஈந்து, கோ வணம் கொண்டு-முதற் கடவுளா யிருக்குந் தன்மையை விளக்கிக் கொண்டு, ஆகுவின் மீது-எலியின் மேலே, குலவிடும் கோலமதுடன்-எழுந்தருளி விளங்கும் திருக் கோலத்துடன், பூவண மடத்தில்-திருப் பூ வண வேதாந்த மடாலயத்தில், வாழ் கணபதி-எழுந்தருளியிருக்கின்ற கணபதியே, நின்-தேவரீருடைய, புநித தாமரை அடி-தூய்மையான தாமரை மலர் போன்ற திரு வடிகளை, தொழுவாம் - (முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை) விநாயகப் பெருமானைக் காரணப் பிரமமாகக் கொண்டு துதித்தலின், காரியப் பிரமங்களாகிய பிரமன் முதலியவர்க்கு முத் தொழிலையுங் கற்பித்தா ரென்ப திழுக்காகாது. 'கொண்டு' என்பது, 'குலவிடும்' என்னும் பெய ரெச்சங் கொண்டது.

தாமரை மலருக்குப் பிற மலர்க் கில்லாத வுயர்ச்சி யிருத்தலின், 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே', 'பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை'', ''மையறு மலரினீங்கி'' எனச் சான்றோர் கூறிய வாறு, இவ் வாசியரும் தாமரையைக் கூறும் பொழுது ஈண்டும் புநித தாமரை



என்பது முதலிய வாக அதற் குயர்வு தோன்று மடை கொடுப்பது போல, ஈண்டும், ''தூவண முறு நற்றாமரை'' என வடை கொடுத்துச் சிறப்பித்தன ரென்க 4

**5. மாவர சாலா தியதருக் களின்கீழ்**
**வயங்கியே வழிச்செலு மவர்க்கும்,**
**ஓவுதல் இன்றி யெளிதினிற் காட்சி**
**உவப்புடன் அளித்தருள் செய்து,**
**மேவிடும் பத்தர் மோதகம் அளிக்க**
**விரும்பிய அருளும்வா ரிதியாய்ப்,**
**பூவண மடத்தில் வாழ்கண பதிநின்**
**புநிததா மரையடி தொழுவாம்.**

(இ-ள்) மா அரசு ஆல் ஆதிய-மா மரம் அரச மரம் ஆல மரம் முதலிய, தருக்களின் கீழ்-மரங்களின் அடியில், வயங்கி-எழுந்தருளி, வழிச் செல்லுமவர்க்கும் - (வழிபட விரும்பிவருவார்க் கன்றி) வழிபட வேண்டு மென்னு மெண்ண மின்றி, வேறு முன்னிலையாகப் போகும்) வழிப் போக்கருக்கும், ஓவுதல் இன்றி-ஒழிவில்லாமல், எளிதினில்-எளி தாக, உவப்புடன் காட்சி அளித்து-மகிழ்ச்சியுடன் காட்சி கொடுத்து, அருள் செய்து-அக் காட்சியைப் பெற்றமையால் அவர்கட்கும் அருள் புரிந்து, மேவிடும் பத்தர்-அன்புடன் வந்து பணிகின்ற அன்பர்கள், மோதகம் அளிக்க - மோதக முதலிய நைவேத்தியங்களை நிவேதிக்க (மகிழ்ந்து), விரும்பிய அருளும் வாரிதி யாய் - (அவர்கள்) விரும்பிய பொருள்களை (விரும்பியபடி) அருள் புரிகின்ற அருட் பெருங் கடலாய், பூ வண மடத்தில்-திருப் பூ வண வேதாந்த மடாலயத்தில், வாழ் கணபதி-எழுந்தருளியிருக்கின்ற கணபதியே, நின்-தேவரீருடைய, புநித தாமரை அடி-தூய்மையான தாமரை மலர் போன்ற திருவடிகளை, தொழுவாம் - (முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக.

(வி-ரை) 'ஆ லாதிய' என்றதனால், வேம்பு, வன்னி முதலியன கொள்க காண விரும்பியவரையும் பிணித்து,

காண விரும்பாதாரையும் பணித் தருள் புரிவான் என்ப தாம். இரவும் பகலும் என்றும் அருள்வா னென்பார், "ஓவுத லின்றி" என்றனர். கணபதி போல எங்குந் தங்கி யெவர்க்கு மெளிதி லருள் புரியுந் தெய்வ வடிவம் வே றொன்று மில்லை யென்ப தாம். இவ் வடி வமே வழிபடுதற் கேற்ற தாகு மென்பது குறிப்பு. அருளும் வாரிதி என்ற குறிப்பினால், 'வாரிதி' என்பதற்கு, அருட் பெருங் கடல் எனப் பொரு ளுரைக்கப் பட்டது அருள் செய்து வாழ் கணபதி வாரிதியாய் வாழ் கணபதி எனக் கூட்டி முடிவு செய்க. விநாயகப் பெருமான் மோதகத்தின் மிகப் பிரிய மானவ ரென்பது, இடது திருக் கர மொன்றில் மோத கத்தை வைத்திருத்தலாற் பெறப்படுகின்றது, அன்பர்க ளதனை யறிந்து மோதகத்தை மிகப் படைத்து நிற்ப ராத லின், "மோதக மளிக்க" என்றனர் 5

6. **ஆவலஞ் சாலை வீதிமுச் சந்தி**
**ஆதிய தலங்களில் உறைந்து,**
**மேவுதா வின்றி யிருக்குநின் பெருமை**
**விளம்பிடப் படுவதோ என்னால்,**
**தேவிதே வனுநிற் பணிந்துதங் குற்றத்**
**தீர்விலூ றறப்பெற அருளிப்,**
**பூவண மடத்தில் வாழ்கண பதிநின்**
**புநிததா மரையடி தொழுவாம்**

(இ-ள்) ஆவலம் சாலை வீதி முச் சந்தி ஆதிய-கொல்லை, பாட்டை, தெரு, மூன்று வழி வந்து கூடுமிட (நாற் சாந்தி) முதலிய, தலங்களில் உறைந்து-இடங்களில் (வழிப் போக்கர் போலத்)தங்கி, மேவு தாவு இன்றி-தங்குதற் குரிய சிறப்பிட மொன் றின்றி, இருக்கும்- (எங்கு) மிருக்கின்ற. நின் பெருமை - (எல்லாம் வல்ல) நினது பெருமையானது, என்னால்-அடியேனால், விளம்பிடப்படு வதோ-சொல்லத் தக்க அளவி லகப்பட்ட தாகுமா, தேவி தேவனும்-அம்மை யப்ப ராகிய சிவ பெருமானும் பார்வதி தேவியாரும், நின் பணிந்து-தேவரீரை வழிபட்டு, தம் குற்



றத் தீர்வில் ஊறு அறப் பெற அருளி-(பின் வழிபட்டமை யால்) முன் வழிபாடு செய்யாமை யாகிய குற்றத்தா லுண் டான தங்கள் இடையூ றொழியப் பெற் றின்புறும்படி அருள் புரிந்து. பூ வண மடத்தில்-திருப் பூ வண வேதாந்த மடாலயத்தில், வாழ் கணபதி - எழுந்தருளியிருக்கின்ற கணபதியே, நின்-தேவரீருடைய, புநித தாமரை அடி-தூய்மை யான தாமரை மலர் போன்ற திரு வடிகளை, தொழுவாம் - (முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை) மேவு தாவு-தனக் கென வரையப்பட்டுத் தங்கு மிடம். தாவு-இடம். தாழ்வு-தாவு என மரீஇய-மருவு மொழி. வேறு மூர்த்திகள் போ லன்றி அடியவர்க் கெளிய னாகி அவ் வடியவர் எங்குங் கண்டு வழிபட் டருள்பெற எங்குந் தங்குவன் விநாயகப் பெருமான் என்பதாம். தங்கம் வெள்ளி இரும் பென்னு மூன்று தாதுப் பொருள்களால் தனித் தனி கோட்டை யமைத்து வான வீதியில் உலவிக் கொண்டு தேவர்கட்கு மக்கட்கு மின்னல் புரிந்த முப்புரத் தாரை, அக் கோட்டைகளோடு அழிப்பதற்கு, தேவனும் தேவியும் தே ரேறிப் போருக்குப் புகும் பொழுது விநாயகப் பெருமான் தன் வல்லமையால் சிவ பெருமா னேறிய தேரி னச்சது பொடிப்படச் செய்தனர்; சிவ பெருமா னதை யறிந்து வழிபட, அருள் புரிந்து முப் புரத்துடன் பொரச் செலுத்தினர் என்பது புராண வரலாறாதலின், "நிற் பணிந்து தங் குற்றத் தீர்வி லூறறப் பெற வருளி" என்றனர். 'நிற் பணிந்து' என்னும் வினை யெச்சம், ஊ றறப் பெற' என் னுஞ் செயப்பாட்டு வினை யெச்சத்தின் பகுதியோடு முடிந்தது. 6

7. **கோவமீ திலக நவமணி குயின்ற**
**கோடிசூ ரியவொளி மான,**
**மால்வளை பொருந்திப் பூடண மணிந்து**
**மன்மன்னர் உருவநன் கமையச்,**

சேவக மாகத் தாவந்த மகலச்
சீவநம் போலவே என்றும்,
பூவண மடத்தில் வாழ்கண பதிநின்
புநிததா மரையடி தொழுவாம்.

(இ-ள்) கோவம் மீது இலக-பொன் மீது விளங்க, நவ மணி குயின்ற-நவ மணிகள் பதிக்கப்பெற்ற, கோடி சூரிய ஒளி மான-கோடி சூரியப் பிரகாசம் போல, மால் வளை பொருந்தி-ஒளி பொருந்திய தொடி செறியப் பெற்று, பூடணம் அணிந்து-(பிற) அணிகளைகயும் அணியப்பெற்று, மன் மன்னர் உருவம் நன்கு அமைய-இராஜ ராஜ (இராஜேசுவர) அரச வடிவம் மிகப் பொருந்த, சேவகம் ஆக-வீரத்துடன், தாவந்தம் அகல-(யாவருக்கும்) துன்பம் நீங்க, சீவநம் போலவே என்றும்-அமிர்தம் போல எப் பொழுதும், பூ வண மடத்தில் வாழ்-திருப் பூ வண வேதாந்த மடாலயத்தில் எழுந்தருளியிருக்கின்ற, கணபதி-கணேசப் பெருமானே, நின்-தேவரீருடைய, புநித தாமரை அடி-தூய தாமரை மலர் போன்ற திரு வடிகளை, தொழுவாம்-(முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை) 'இலக' என்னும் வினை யெச்சம் 'குயின்ற' என்னும் பெய ரெச்சங் கொண்டது. "பொருந்தி, "அணிந்து" என்பன, செய வெனெச்சத் திரிபாதலின், திரிந்ததன் றிரிபது என்னு முறை பற்றி, "அமைய" என்னும் பிறவினை யெச்சங் கொண்டது. 'அமைய', 'ஆக', அகல, போல, என்னும் வினை யெச்சங்கள், ஒன்றனை யொன்று கொள்ளாது. 'வாழ் கணபதி' யென்னும் வினைத் தொகையில், முன் மொழியைக் கொண்டன என்க. 'பொருந்தி', அணிந்து என்னுஞ் செயப்பாட்டு வினைகள். செய்வினைகள் போ னின்றன; படு விகுதி செயப்பாட்டு வினைக்கண் வாரா திருத்தலு முண்மையின். இலக்கணக் கொத்து நூலார், "படுதொகை யொடுதொகை ஏமெனப்படுமே" எனக் கூறு மாற்ருனு மறிக. மன்னர்க்கிறைவன். ("மன்னர் மன்னன்" என்பது, "மன்மன்னர்" என விகாரமாயிற்று).



சூரிய வொளி, சூரியன் ஏழ வகை வருணங்களுக்கு மிடமாயிருத்தலின், சூரிய ஒளி, நவ ரத்திநங்க ளழுத்திச் செய்யப்பட்ட தொடி யொளி, பிற வணிகளி னொளிகளுக் குவமமாயிற்று.

காத்தற் குரிய அரசர்க்கு, அணி முதலியவற்ரு லழகு பெற இருத்தல் மட்டு மன்றி. வீரம் ஊக்கம் ஈகை அறிவு முதலிய இலக்கணங்களும் சிறப்பாக வேண்டுமென்பார், "சேவக மாக" என்றனர். 'சேவக' மென்றதனுல், உபலக்கண மாக ஊக்க முதலியன கொள்ளப்படு மென்க. அரசர். மக்களைக் காணலாற், பிணிக்குங் காட்சிய ராகியும், பேணலாற், பிணிக்கும் சேவக முதலிய வுடையராகியும் இருப்பது போல, இறைவ னுகிய விநாயகப் பெருமானு மெழுந்தருளியிருக்கின்றனர் என்பதாம். 7

8. மூவித வுருப்போற் ருேற்றினு நினது
முதன்மையுற் றெவர்க்குஞ்செப் பரிதால்,
வீவுத லின்றிக் கேவல மாக
விளங்கிடு முண்மைரு பத்தைப்,
பாவனை செய்யும் பக்குவர்க் கருளிப்
பரமநல் வீட்டின்பம் அளிப்பான்,
பூவண மடத்தில வாழ்கண பதிநின்
புநிததா மரையடி தொழுவாம்.

(இ-ள்) மூவித உருப் போல் தோற்றினும்-நர கய தேவ வடிவு மூன்றையு மோ ருடலி லொருசேர வமையப் பெற்றவ னுக நீ விளங்கினும், நினது முதன்மை-நின்னுடைய விநாயகத் தன்மையானது. உற்று எவர்க்குஞ் செப் பரிது-உற்றுப் பார்த்து எவர்க்குஞ் சொல்ல முடியாத தொன்ருதும், வீவுதல் இன்றி கேவல மாக விளங்கிடும்-அழி வின்றி ஒன்ருக மிளிருகின்ற. உண்மை ருபத்தை-பிரத்திய கபிந்ந எதார்த்த சொருபத்தை, பாவனை செய்யும் பக்குவர்க்கு அருளி-அகம் பிரமாஸ்மி யென நிதித்தியாசநஞ் செய்பவர்க ளாகிய சாதந சதுட்டய சம்பன்னர்

களுக்குத் திடாபரோட்ச ஞானத்தை யீந்து, நல் பரம வீட்டின்பம் அளிப்பான்-துக்கஞ் சிறிது மின்றிய மேலான முத்தி யின்பத்தை யீயும் பொருட்டு, பூ வண மடத்தில் வாழ்-திருப் பூ வண வேதாந்த மடாலயத்தி லெழுந்தருளி யிருக்கின்ற, கணபதி-கணேசப் பெருமானே. நின்-(அத் தகைய) தேவரீருடைய, புநித தாமரை அடி-தூய தாமரை மலர் போன்ற திரு வடிகளை, தொழுவாம்-(முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக (எ-று)

(வி-ரை) நல் பரம வீட்டின்ப மளிப்பான் வாழ் கணபதி நினது முதன்மை உற்றெறவர்க்கும் செப் பரிது (அத் தகைய) நினது புனித தாமரை யடி தொழுவாம் எனக் கூட்டி முடிக்க. எல்லா மா யல்லவனுயு மிருத்த லின், நினது முதன்மை...... எவர்க்குஞ் செப்பரிதால், என்றனர். ‘மூ வித வுரு வுடைமை’ எல்லாமா யிருத்தலை காட்டுகிறது. ‘வீவுத லின்றிக் கேவல மாக விளங்குதல்’ அவை அல்லவன் என்பதை யுணர்த்துகின்ற தென்க பாவனை நிதித்தியாசநம். அது ‘கேள்வி விமரிசம் பாவனை’ என வருதலாற் காண்க. துக்கஞ் சிறிது மின்றிய தென் பார் ‘நல்’ எனவும், ‘அழிவின்றியது’ என்பார், ‘பரம’ எனவும் கூறினர். 8

9. மூவித வேலா கியபடை யுடைய
முதல்வனுர் குமரனும் இளைஞன்,
தேவனீந் தருளு மாங்கனி பெறுவான்
சிகியிவர்ந் துலகினைச் சுறறி,
மேவுதன் முனமே பிதாவினை வலமா
மேவியக் கனிகவர்ந் தோயே.
பூவண மடத்தில் வாழ்கண பதிநின்
புநிததா மரையடி தொழுவாம்.

(இ-ள்) மூ வித வே லாகிய படை உடைய-மூன்று தலைகளை யுடைய வேற்படையை(சூலாயுதத்தை)உடைய. முதல்வனுர் குமரனும் இளைஞன்-தலைவ ராகிய சிவ பெருமானுக்கு மகனு ராகிய என்றும் இளமை பூண்ட முருகக் கடவுள், தேவன் ஈந்தருளும்-சிவ பெருமான், (நுங்க ளிருவீருள் யார் முந்தி உலகினைச் சுற்றி வருவீரோ, அவருக்கிந்த மாங் கனியைத் தருவேன் என) கொடுத் தருள இருக்கின்ற. மாங் கனி பெறுவான் - மாம்பழத்தை (முந்திப் பெறும்)பொருட்டு, சிகி இவர்ந்து-மயில் மீதேறி, உலகினை சுற்றி-உலக முழுவதையுஞ் சுற்றிவந்து, மேவுதல் முனமே- அப் பழத்தைப் பெறுவதற்கு முன்பாகவே, பிதாவினை-(எல்லா வுலகமு மானவ னுகிய) தந்தையா ராகிய சிவ பெருமானை, வல மா(க) மேவி-வல மாக வந்து, அக் கனி கவர்ந்தோய் - அம் மாம்பழத்தை (தம்பிக் கில்லாதபடி) அபகரித்தோனே, பூ வண மடத்தில்-திருப் பூ வண வேதாந்த மடாலயத்தில், வாழ் கணபதி-எழுந்தருளியிருக்கின்ற கண பதியே, நின்-தேவரீருடைய, புநித தாமரை அடி-தூய்மை யான தாமரை மலர் போன்ற திரு வடிகளை, தொழுவாம்-(முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை) உபாதி பேதத்தால், காரணப் பிரம்மம் காரியப் பிரம மென வேறுபட நிற்ற லன்றி, உண்மையில் மெய்ப் பொரு ளொன்றேயா மாதலின், உலக முறையில் புத்தி நுட்ப முடையவர் கணேச ரென உயர்த்திக் கூறு முகத்தான், அப் பெருமானைக் காரியப் பிரமமாகவு முபசரித் துள்ளார், வர லாறு நோக்கி யென்க. ‘மூ விதம்’ என்பதில் ‘விதம்’ என்பது “சில் வகை யெழுத்தில்”, ‘வகை’ என்பது. ‘சில்’ என்னும் முன் மொழிப் பொருளை யன்றி வேறு பொரு ளின்றி நிற்பது போல, முன் பொரு ளாகிய ‘மூன்று’ என்னும் பொருளை யன்றி வேறு பொரு ளின்றி நின்ற தென்க. பழம் பெற முந் துற்ற இளைய பெருமாளுக் கின்றித் தான் முந்தி வலம் வந்து கொண்டமையால், ‘கவர்ந்தோய்’ என்றனர். சிகையை யுடையது மயிலு மாதலின். அது சிகி எனப்பட்டது. சிகி-மயில் முன்னம், முன மென இடைக் குறை யாயிற்று. 9

10. சாவண மின்றி யின்பமா நிலைக்கச்
சற்குரு பாதமே போற்றி,
கோவண மின்றி நடநா யகனாய்க்
குலவிடும் கோலமே போற்றி.
ஏவமொன் றின்றி யெவர்க்குமே யருள்வான்
இலகிடும் அருளுரு வாகிப்,
பூவண மடத்தில் வாழ்கண பதிநின்
புனிததா மரையடி போற்றி.

(இ-ள்) ஏவம் ஒன்று இன்றி-துன்பஞ் சிறிது மில்லாமல் (மகிழ்வுடன்), எவர்க்குமே-அன்பிற் சிறந்தார்க்கேயன்றிச் சிறவாதவருக்கும், அருள்வான் - (வேண்டியவற்றைக்) கொடுத்தருளும் பொருட்டு, இலகிடும் - விளங்குகின்ற, அருள் உரு வாகி-அருளே வடி வாகி, பூ வண மடத்தில்-திருப் பூ வண வேதாந்த மடாலயத்தில், வாழ் கணபதி-எழுந்தருளியிருக் கின்ற கணபதியே, நின்-தேவரீருடைய, புனித தாமரை அடி-தூய்மையான தாமரை மலர் போன்ற திரு வடிகள், போற்றி—வாழக்கடவன. சாவண்ணம் இன்றி - (யான்) பிறந் திறக்கின்றே னென்னும் பொய்த் தோற்ற மில்லாமல், இன்பம் ஆய் நிலைக்க-அழியாத இன்ப வடிவ மாக என்று மிருந்தபடியேயிருப்பதற்கு (உபதேசித் தருளிய), சற் குரு பாதம் போற்றி-சதாச்சாரிய ருடைய திரு வடிகள் வாழக்கடவன. கோவணம் இன்றி-கோவணம் இல்லாமல், நடந நாயகனாய்-திருக் கூத்தாடுந் தலைவ னாகி, குலவிடும் கோலம்-விளங்கும் தேவரீருடைய திருக் கோலம், போற்றி-வாழக் கடவது.

(எ-று)

(வி-ரை) 'எவ்வம்' ஏவ மெனத் திரிந்தது (விகார மாயிற்று.) 'எவர்க்கு' மென்பது முற் றும்மையோடு கூடியது. 'அருள்வான்' என்பதி லுள்ள 'வான்' என்பது, வினை யெச்ச விகுதி. 'ஏவ மொன் று மின்றி' என விருக்க வேண்டிய யும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. "முக்



காலத்தினு மொத்தியல் பொருளைச் செப்புவர் நிகழுங் காலத்தால்" என்ப வாகலின். 'இலகிடும்' என நிகழ் கால வினை முற்றுக் கொடுத்து, விநாயகப் பெருமான், திருப் பூ வண வேதாந்த மடாலயத்தில், என்றும் வேண்டுவார்க்கு வேண்டுவன ஒழி வின்றி யருளுகின்றனர் என அப் பெருமானது சிறப்புத் தோன்ற அமைத் திருக்கின்றனர். பால கணபதி யாகத் திருக் கூத்தாடுங் கோலத்துட னங் கெழுந் தருளியிருத்தலின், "கோவண மின்றி... குலவிடுங்கோலம்" என்றனர். 10

திருப் பூ வண மடத்துக் கணபதி தோத்திரமும், சிதம்பரம்,
கோ. சித. மடம், சிதம்பர சுவாமிகள் மாணாக்கர்,
மதுரை—தமிழ்ச் சங்கத்துப் பண்டித, திரு வை யாறு
அறு பத்து மூவர் மடம், ஸ்ரீ நாராயண சுவாமிகள்
இயற்றிய நுந்தா வொளி (நித்தியப் பிரகாசம்) என்னும்
உரையும் முற்றுப் பெற்றது.

இடையூறு நீக்கப் பெற்று வாழ்க

---

மதுரைப் பொற் றாமரைக் குளத்துத் தென்
கரையில் மேல்பா லெழுந் தருளியிருக்கின்ற,

## விபூதிக் கணபதி தோத்திரமும்,

"நுந்தா வொளி" (நித்தியப் பிரகாசம்) என்னும் உரையும்.

1. சீரே றுலகம னைத்தையும் விளக்கிச்
சேல்வுறர் இன்றியே அவற்றிற்,
பேரே றுறவமர் சீரிய கணேச
பீடில்ஞா லத்தினை யகற்றிச்,
சூரேறி லேகப்பி ரமமா யிருக்கச்
சொல்லும்வி பூதியி னுடனே,
நீரேய் மதுரைப்பொற் றாமரைக் கரையின்
னிகழ்கண பதிநினைத் தொழுவாம்.

(இ-ள்) சீர் ஏறு உலகம் அனைத்தையும் - விழுப்பமமைந்த உலகங்கள் எல்லாவற்றையும், விளக்கி - (அபின்ந நிமித்தோபாதாந காரண மாய் நின்று படைத்து அவை நிலை நின்று) விளங்கும்படி செய்து, அவற்றின்-அவ் வுலகங்களுடன், சேர்வுறல் இன்றி-கலந்து மயங்குத லில்லாமல், பேர் ஏறு உற-மிக்க ஏற்றம் பொருந்த, அமர்-எழுந்தருளியிருக்கின்ற, சீரிய கணேச-விழுமிய கணேசப் பெருமானே, பீடு இல் ஞாலத்தினை-(அடியவர்கள் தேகாதிபிரபஞ்சத்தினை யான் எனதென வபிமானித் துழலுதற்குக் காரணமாயிருத்தலின்,) பெருமை யில்லாத அஞ்ஞானத்தினை, அகற்றி-நீக்கி, சூறு ஏறு இல்-துன்பம் பொருந்துத லில்லாத (இன்ப வடிவ மாகிய) (அநர்த்த நிவிர்த்தி யாநந்தப் பிராப்தி வடிவமான), ஏகப் பிரமம் ஆய்-அத்வைதப் பிரமமே யானெனத் தெளிந்து, இருக்க-(ஆறி) யிருக்க, சொல்லும்-(குரு மூர்த்தமா யெழுந்தருளித் தத்துவமஸி மகாவாக்கியப் பொருளை) உபதேசித்தருளுகின்ற, நீர் ஏய்-நீர் நிறைந்த, மதுரை-ஆலவாய்க்கண் ணுள்ள (கோயிலினுள்) விளங்கும், பொன் தாமரைக் கரையில்-பொற் றாமரை வாவியின் தென் கரையின் மேல்பால், விபூதியுடன் நிகழும்-திரு நீற்றுடன் எழுந்தருளி விளங்குகின்ற, கணபதி-கணபதியே, நினை தொழுவாம்-தேவரீரை (மன மொழி மெய்களினால்) வழிபடுவோமாக.

(எ-று)

(வி-ரை) உலகங்கள் கோளகங்க ளாய் ஒரு நிலைப் படாது எருக்கலம் பஞ் சென, வான வெளியிற் சுழன்று கொண்டிருப்பினும், அவை மெய்ம்மை யுடையன அல்ல, சீர்மை யுடையனவே யென்பார், 'சீ ரே றுலகம்' என்றனர். சீர்-கனம். சீவர்களும் பண்டங்களைப் படைப்பினும் அவர்கள் தம் வயத்தராய் நின்று படைக்காமல், கன்மத்திற் கீடாக இறைவ னியக்க இயங்குங் கர்த்தர்களாய் நின்று படைக்கின்றன ரன்றி வேறின்று; சீவர்கள் உபசாரக்கர்த்தாகளேயாவர். ஆதலின், சீவர்களின் படைப்பு முதலியனவும் இறைவன் படைப்பு முதலியனவாக அடங்குதலின்



"உலக மனைத்தையும்" எனக் கூறினர். இனி "உலகமனைத்தையும்" என்பதற்குப், பிரபஞ்ச முழுவதையும் எனப் பொருள் கோடல் சாலும் என்க. இறைவ னியல்பாகவே அஞ்ஞாந ரகித னுகலின், "சீரிய கணேச" என விளித்தனர். அஞ்ஞாந வயப்பட்டவர் சீரிய ராகா ரென்க. "ஞால" மென்பது ஆகு பெயராய்த் தன் காரண மாய அஞ்ஞாநத்தை யுணர்த்திற்று. இனிப் "பீடில்" என்பதற்கு, (சத்தென்றும் அசத் தென்றும் சதசத் தென்றும் சொல்லுதற் கிலக்காகாமல் பாத யோக்கியமா யிருத்தலின்) பெருமை யில்லாத எனப் பொரு ளுரைப்பினும் பொருந்தும். நீங்கி ஆறியிருத்தல் அடியவர் வினை, அங்ஙனம் இருக்கச் செய்தல் இறைவ னுகிய கணபதி வினை எனக் கொள்க. சொல்லுங் கணபதி யென முடிக்க. இப் பதிக ஆசிரியர் அத்வைத பிரஹ்ம போதக பராயண ராதலின், "ஜந்மாத்யஸ்ய யத:" என்பது முதலியவற்றை யடியொற்றி இறைவ னுவா னிவனென்பதும், இறைவனை வழிபட்டவனுற் பெறத் தக்கதிது வென்பதும், கடவுளை வாழ்த்தப் புகுந்தீரே, கடவுள் யார்? அவனுற் பெறத் தக்க பயன் யாது? என்பவற்றிற்கு விடையும் போதர, இம் முதற் பாவை யாத்தன ரென்க.

இவ் வாசிரியர் போலவே பிறரும், "உலக மியாவையுந் தாமுள வாக்கலும், நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா, அலகி லாவிளை யாட்டுடை யாரவர், தலைவர்" (கம்பர்) எனவும், "அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு." (1—1) எனவும், "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார், இறைவனடி சேரா தார்". எனவும் 1—10. (வள்ளுவர்) கூறிக், 'கடவுள் யார், அவராற் பெறும் பயன் யாது' என்னும் வினுக்கட்கு விடை கூறிக், கடவுளை வழிபடின், "துன்ப வொழி வுண்டாதல் ஒருதலை" யென வற்புறுத்தல் காண்க.

உலகங்களைப் படைத்து, அவற்றின் வயப்படாமல், அவற்றி னுட்பட்ட சராசரப் பிரபஞ்ச கணங்கட்குத் தலைவனு யிருப்பவன் விநாயகனே என்பார், "சீரிய கணேச"

எனவும், அச் சராசரப் பிரபஞ்சத்தினு ளேற்ற முடையவராய்த் துன்ப வொழிவு குறித்துத் தனை வந் தணுகும் அடியவர்கட்கு அகப் பற்றுப் புறப் பற் றிரண்டனையு மொழித் தாநந்தைகரசரா யிருக்கும்படி யுபதேசித் தவ் வடியவர் கணத் தலைவனு யிருப்பவனு மவனே என்பார், “சொல்லுங் கணபதி” எனவும், கணப் பிரி வுண்மையின், தலைமைத் தன்மையு மிரண்டாயிற் றென்பது போதர, இரு முறை விளித்தன ரென்க. 1

2. திருவளர் கமலத் தயன்முத லாய
தேவராய் முத்தொழி னடத்தி,
இருண்மலம் இரிய யாவரு முன்றன்
இணையடி யண்மிய போதே,
தருணமி தெனவோர்ந் தருளிடு நினது
தயையினை மனத்தினில் உன்னிப்,
பொருவரு மதுரைத் தாமரைத் தடத்திற்
பூதியார் கணேசநிற் பணிவாம்.

(இ-ள்) திரு வளர் கமலத்து அயன்-திரு வளர்கின்ற தாமரைப் பீடிகையி லெழுந்தருளியிருக்கின்ற பிரமன், முத லாய தேவ ராய்-முதலிய தேவர்க ளாகி, முத் தொழில் நடத்தி-படைத் தளித் தழிக்கின்ற மூன்று தொழிலு நிகழுமாறு செய்துகொண்டு யாவரும்-விருப்புடையாரு மஃதில்லாதாரு மாகிய அனைவரும், உன் தன் இணை யடி-தேவரீருடைய இரண்டு திரு வடிகளையும், அண்மிய போதே - நெருங்கி வழிபட்ட அப் பொழுதிலேயே, தருணம் இது என ஓர்ந்து-இது நல்ல சமய மென வெண்ணி, இருள் மலம் இரிய-ஆவரண விக்ஷேப சத்திக ளுடைய இருள் வடி வாகிய அஞ்ஞாந பந்தம் கெட, அருளிடும்-கிருபா வீக்ஷண்யஞ் செய்கின்ற, நினது தயையினை-தேவரீருடைய தண் ணளியை, மனத்தினில் உன்னி-நெஞ்சத்தில் நினைத்து, பொருவு அரும்-ஒப் பில்லாத, மதுரை-மதுரை மா நகரத் திருக் கோயிலினுள் (விளங்கும்), தாமரைத் தடத்தில் - பொற்றாமரைக் குளக் கரையின் தென்பால் எழுந்தருளியிருக்கின்ற, பூதி ஆர் கணேச- திரு நீற்றை நிறையப் பூசி விளங்கும் கணேசப் பெருமானே, நின் பணிவாம்-நின்னை (மந மொழி மெய்களால்) வணங்குவோமாக (எ-று)



(வி-ரை) ‘திரு வளர் கமலம்’ என்பது. ‘திருவளர் தாமரை’ (திக் கோவையார்), ‘திருவளர் கமலத் தயன்’ (வைராக்ய தீபம்) என்பவற்றை யொத்த பிரயோகம். திரு-கண்டாரால் விரும்பப்படுந் தன்மை-நோக்கம். இலக்குமியார் தங்கும் தாமரை மலர் போன்ற தாமரை மலர் எனத், ‘திரு வளர் கமலம்’ என்பதற்குப் பொரு ளுரைப்பினும் பொருந்தும். கண்டாரால் விரும்பபப்டுந்தன்மையாய நோக்கம், மென் மேலு மங்கா தோங்கிநிற்றலின், ‘வளர்’ எனக் குறித்தனர். பிரமன் றங்கு மலர் வாடாது பொலிந்து நிற்றலின், அங்ஙன முரைத்தா ரெனினு மாம். வளர் கமலம்வினைத் தொகை. அயன் முத லாய தேவர், விஷ்ணு. உருத்திர னுவர். ‘படைத்தளித் தழிக்கமும் மூர்த்தி யாயினே’(திரு நாவுக் கரையர்)எனக் கூறியிருத்தலையுங் காண்க. ‘ஆகிய’ என்பது ஆய என இடை குறைந்தது என்பர் ஆகு பகுதி யென்போர். ஆவே பகுதி யென்போர், இடை குறைந்த சொல் லன்றிலை தென்பர். யாவரும் என்பதில், ‘யா’ வென்பது. எஞ்சாமைக்கண் வந்தது. உம்மை முற் றும்மை. ‘யாவரும்’ என்பதற்கு, அன்பில் உரம் பெற்றவரே யன்றி, உரம் பெறுதவரும் என வுரைப்பினும் அமையும் ‘யாவரு முணர’ (நன் னூற் பாயிரம்)என்புழி யுரைத்த வுரை யீண்டு நோக்கத் தக்கது, விருப் பின்றியவரும் வழிபட வருவரோ எனின்? சேர்க்கையால் வருவ ரென்க. மீண்டும் வராதிருப்பின் என் செய்வது, வந்த போதே வழிபட்டா ரெனு முறை கொண்டு, அருளும் சிப்பிரபிரசாதி யாகலின், “தருணமி தென வோர்ந் தருளிடும்” என்றனர். முன் பாடலில், “சீரேறுலக மனைத்தையும் விளக்கி” எனப் பொது வாகக் கூறினர். இப் பாடலில் இறைவன் இன் னின்ன வடிவமாக நின்று முத் தொழில் நடத்துகின்றார் எனக் கூறுதலோடு, ‘அருளிடும் தயையினை’ என்பதனுல், அநுக்கிரகத்

தையும், 'இருண் மல மிரிய' என்னுந் தொடரால், அவன் திரோபவத்தையும், குறிப்பித்து, இறைவன் பஞ்சகிருத்தி யன் என்பதையும் ஒருவகை யாகக் குறிப்பித்தன ரென்க. 2

3. சிவன்றரு குமர தேசிகத் தலைவன்
சிவன்கையில் மாங்கனி கொள்ள,
அவனுடைத் தான அவனியைச் சுற்றி
யதிவிரைந் தோடியே வருமுன்,
தவமுறு நினது யூகபுந் தியினால்
தாயையும் பிதாவையுஞ் சுற்றி,
நவிலுமக் கனிகொள் தாமரைத் தடத்தி
னற்கண பதிநினைத் தொழுவாம்.

(இ-ள்) சிவன் றரு குமர-சிவ பெருமான் பெற் றெடுத்த புதல்வரே. தேசிகத் தலைவன்-ஆசாரிய ராகிய சிவ பெருமானுக்கு மாச்சாரிய ராகிய முருகப் பெருமான், சிவன் கையில் மாங்கனி கொள்ள - (சிவ பெருமான் தன் கையில் மாங் கனி யொன்றை வைத்து, இக் கனியை, உலகத்தை எவர் முந்திச் சுற்றிவருகின்றனரோ, அவருக்குக் கொடுப் பேன் எனக் கூற) அச் சிவ பெருமான் கையி லேந்திய அம் மாங்கனியைப் பெறுவதற் காக. அவனுடைத் தான- அச் சிவ பெருமா னுடைய வுடமை யாக வுள்ள, அவ னியை - உலகத்தை. சுற்றி - (மயின்மீ தேறிச்) சுற்றிக் கொண்டு, அதிவிரைந்து ஓடி வரு முன்-மிக விரைவாக ஓடி வரு முன்னரே, தவம் உடை நினது-சத்துவ நிலையாய தவத்தை இயல் பாக வுடைய (பெறுதற்கேற்ற) தவங் கொண்ட தேவரீ ருடைய, யூக புந்தியினால்-விசார முடைய புத்தி சாமர்த்தியத்தால், தாயையும் பிதாவையும் சுற்றி-அம்மை யப்பர்க ளாகிய பார்வதி பரமேசுர ரிருவரை யும் வலம் வந்து, நவிலும் அக் கனி கொள்-புராணங்களா லு மன்பர்களா லு முயர் வாகக் கூறப்பட்ட (சிவ பெருமான் திருக் கையி லேந்திய) அந்த மாங்கனியை (அவரிட மிருந்து) பெற்ற. தாமரைத் தடத்தின்-(மதுரைத் திருக் கோயிலி னுள் விளங்கும்) பொற் றாமரைக் குளத் தென் கரையின்



(மேல்பால் விளங்கும்), நல் கணபதி-நல்ல விபூதி விநாய கரே, நினை துதிப்பாம் - தேவரீரை (முக் கரணங்களா லும்) (வா யாரப்) புகழுவோமாக. (எ-று)

(வி-ரை) கொள் கணபதி, நற் கண பதி யெனக் கூட்டி முடிக்க. இங்ஙனம் தனித் தனி தொக்க சொல் லாகக் கொள்ளாது, கண பதி யென்பது, நல் என்பதனோடு தொக்கு, அத் தொடர், தாமரைத் தடத்தின் என்னுந்தொட ரோடு தொக்கு ஒரு சொல்லாய்நிற்க, அதனை, 'கொள் என் பது' கொண்டது எனக் கூறலும் பொருந்தும். 'கொள் கணபதி' என்பது, இறந்த கால வினைத் தொகை. வரும் என் னும் பெய ரெச்சம் முன் என்னும் காலப் பெயர் கொண் டது. 'வருமுன்னர்க் காவாதான்' (வள்ளுவர் 44-5) என் பது போல. 'அதி நுட்பம்' (திருக் குறள் 64-6) என்பது போல, அதி என்னும் வட மொழி யிடைச் சொல்,விரைந்து என்னுந் தமிழ்ச் சொற் கடையாய் நின்றது. அதிகாரத்தால் 'தாமரைத் தடம்' என்பதற்குப் பொற் றாமரைக் குளம் எனப் பொரு ளுரைக்கப்பட்டது. உபாதி பேதத்தால் காரண காரியப் பிரமங்க ளாய்த் தோன்றும் பொரு ளொன்றேயா மென்பது நூல்களின் கருத்தாகலின், முன் காரணப் பிரமமாய்க் கூறிய கணேசப் பெருமானையே, "சிவன் றரு குமர" எனக் காரியப் பிரம மாகவு முபசரித்தனர்.

நவில்தல்-அடிக் கடி கூறல். 'தந்தை வலத்தா லருள் கைக் கனியோனே" (அருண கிரி நாதர்) எனப் பிறர் கூறுத லுங் காண்க. தாய் தந்தையரை வலம் வந்தாலே உல கத்தை வலம் வந்த தாகும் என்னும் நூற் கருத்தை யுட் கொண்டும், உலகம் பார்வதி பரமேசுரர்களின் அதீனமா யிருத்தலின், அவர்களை வலம் வந்தால் உலகத்தை வலம் வந்ததாகும் என எண்ணியும், இன்னும் பல படியாக எண் ணியும், தாய் தந்தையர்களை வலம் வந்தமையினால், "யூக புத்தியினால்" என்றனர். தாயையும் தந்தையையும் வலம் வந்தனர் என்பதைச் சிவ மஹா புராணத்திற் காண்க.

அப் புராணத்தில், பெண்ணை மணப்பதற்காகப் பரமேசுரன் கணேச கந்தர்களைப் பார்த்து உலகத்தைச் சுற்றி வரச் சொல்லக், கணேசர், தாய் தந்தையர்களை யருச்சித்து, ஏழு முறை வலம் வந்து, எனக்கே முன்னர் மணஞ் செய்ய வேண்டு மென்று கூற, அது கேட்டுக் களிப் படைந்து, அவ் விரு முது குரவரும் மணஞ் செய்வித்து மகிழ்வூட்டி னர், என வேறு வித மாகக் கதை கூறப்பட்டுளது. 3

4. வேதநான் கினையும் வேறுவே றாக
விரித்தநல் வியாசர்தாஞ் செய்த,
ஏதமில் லாத பாரத மதனை
யிங்குளா ரியாவரு முணர,
ஓதுறு மொருகோட் டால்வரை வரைநின்
னுயர்திறன் மநத்தினி லுன்னிச்,
சீதமார் மதுரைப் பொன்மரைக் கரைவாழ்
சிவகண பதிநினைத் துதிப்பாம்.

(இ-ள்) வேதம் நான்கினையும்-(நுண் ணறிவினோரா லுணரத் தக்கனவாய் முன் பின் னாக முறை மயங்கிக்கிடந்த) தைத்திரியம், பௌடிகம், தலவகாரம் சாமம் என்னும் நான்கு வேதங்களையும், வேறு வே றாக-(சிற் றறிவினோரு முணரும்படி) தனித் தனி யாக (விளக்க முற), விரித்த-இருக், எஜுர், சாமம், அதர்வணம், என வகுத்துக் கூறிய, நல் வியாசர் தாஞ் செய்த-நல்ல வியாச பகவனால் செய்யப் பட்ட, ஏத மில்லாத-வருத்த மின்றி யுணரத் தக்க, பாரத மதனை-(ஐந் தாவது வேத மெனக் கூறுப்படும்) பாரத இதி காசத்தை,இங் குளார் யாவரும் உணர-இம் மண் ணுலகத்தி லுள்ள யாவரு மறியும்படி, ஓதுறும்-'(ஒரு கொம் பிரு செவி' 'ஒரு கோட்டன்' என்பன முதலிய வாகப்) புகழ நிகழ்கின்ற, ஒரு கோட்டால்-ஒற்றைச் சிருங்க மாகிய எழுது கோலால், வரை-மகா மேரு மலை யாகிய (ஏட்டின் கண்), வரை-எழுதிய, நின் உயர் திறன்-தேவரீ ருடைய உயர்ந்த ஆற்றலை, மனத்தினில் உன்னி - உள்ளத்தின் கண்ணே உள்ளி, மதுரை-மதுரைப் பதியின் நடுவ ணமர்ந்த



திருக் கோயிலி னுள் விளங்கும், சீத மார் பொன் மரைக் கரை வாழ்-குளிர்ச்சி பொருந்திய பொற் றாமரைக் குளத் தென் கரை மேல்பால் எழுந்தருளியிருக்கின்ற, சிவ கண பதி-மங்கள மாகிய கணேசப் பெருமானே, நினை துதிப்பாம்-தேவரீரைப் (முக் கரணங்களா லும்) புகழுவோமாக. (எ-று)

(வி-ரை) வேதம் முற் காலத்தில் உணர்தற் கருமைய வாக தைத்திரியம் பௌடிகம் தலவகாரம், சாமம் என நான்கா யமைந்து கிடந்தன வென்பதும். பிற் காலத்தில் அவற்றையே யாவரு முணரு மாறு தனித் தனி யாக ஒவ் வொரு பகுதியும் விளங்கிக் கிடக்கும்படி வியாசர் இருக் எஜுர் சாமம் அதர்வணம் எனப் பகுத் தமைத்தன ரென் பதும், தொல் காப்பியப் பாயிர வுரையில் 'நான்மறை முற் றிய' என்னுந் தொடருக்கு விளக்கங் கூற வந்த உச்சி மேற் புலவர் கொள் நச்சினார்க் கினிய ருரையினால் அறியப்படு கின்றன.

இனி, மயங்கியும், பல்கியும் கிடந்த வேதங்கள் அறிதற்கு மோ துதற்கு மரியனவா யிருத்தலின், ஒவ் வொரு பகுதியும் தனித் தனி யாக விளங்கிக் கிடக்கும்படி நான் காக வகுத்து, வகுத்த அவற்றை உலகத்தி லியாவரு மோதி யுணரும்படி பரப்பியன என ''வேறு வே றாக வேத நான்கினையும் விரித்த'' என்பதற் குரை கூறினும் நன்று.விரித்த-பரப்பிய. ஆறங்கமு முணர்ந்தவரே வேதப் பொருள் காண வல்லவ ராவர். அங் ஙன மின்றி எல்லாரும் வருத்த மின்றி உணரும்படி பாடப் பட்டிருத்தலின், 'ஏத மில்லாத பாரதம்' என்றனர். தன் பால் வந் தன்புடனே. அன் பின்றியோ, மூழ்குவோருடைய பாபத் தாபங்களைக் களைதலின், 'சீத மார்' எனப் பொற் றாமரைக் குளத்தினை விசேடித்தனர். 'தாமரை' என்பது, ''மரை யிதழ் புரையு மஞ் செஞ் சீரடி'' என்பது போலத் தலை குறைந்து, மரை என நின்றது செய்யுள் விகாரம். 'தாமரை' என்பது, இடத்து நிகழ் பொரு ளாய் இட மாகிய குளத்தினை யுணர்த்திற்று, இஃ தாகு பெயர். முன்னும் பின்னும் தாமரைக் குளத்தினைக் குறிக்கு மிடமெல்லா மிவ்

வாறே கொள்க. உலகத்தில் நல்ல நாயகி ஒருத்திக்குத் தன் ஞயகன் குணங்கள் பலவற்றையோ, ஒவ் வொன்றையோ, எண்ணுந் தோறும் விருப்பம் பெருகுவ தியல்பாதல் போலப், பக்தர்களுக்கும் இறைவனுடைய சர்வஞ்ஞத்வாதி கல்யாண குணங்கள் பலவற்றையோ, ஒவ் வொன்றையோ எண்ணுந் தோறு மன்பு பெருகு மென்பதை நா மறியு மாறு, "ஓதுறு மொரு கோட்டால் வரை வரை நின் னுயர் திறன் மனத் தினி லுன்னி" என்றனர். நாரத பக்தி சூத்திரத்தில், பக்தி சாதநங்க ளிவை யெனக் கூறுமிடத்து, "**லோகோபி பகவத் குண சிரவண கீர்த்தநாத்**" என்பதனுல். பகவானுடைய குணங்களைக் கேட்டல், புகழ்தல்களால் பக்தி யுண்டாகும் என்பது கூறப் பட்டுள்ளது. இதனுல், நாரத பகவானுக்குப் பகவத் குணங்களை மனத்தா லெண்ணுதலும் பக்தி சாதந மாம் என்ப துடன்பாடாதல் பெறுதும்.

இவ் வாசிரியர் கூறியபடியே பிறரும், "நீடாழி யுலகத்து மறைநாலோ டைந்தென்று நிலைநிற்கவே, வாடாத தவவாய்மை முநிராஜன் மாபார தஞ்சொன்னநாள், ஏடாக மாமேரு வெற்பாகு மங்கூரெ ழுத்தாணிதன், கோடாக வெழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு கூர்வாமரோ." (வரந் தருவார்) எனவும், "பாரதங் கோட்டு நுதியா லெழுதிய பண்ணவனே." (பழ மலை யந்தாதி) எனவுங் கூறியிருத் தல் காண்க.
4

5. பரவுவார் தமக்குப் பரகதி கொடுக்கப்
பாரினிற் றடாகம்வீ திகளில்,
விரவியே யிருந்து குட்டியே வணக்கம்
விருப்பொடு செய்பவர் தங்கள்,
உரமுறு பாவ வினைகளைப் பாற்றி
யொண்டிரு வடியினிற் சேர்க்கும்,
வரமுறு மதுரைத் தீர்த்தநற் கரையில்
வாழ்கண பதிநினைத் தொழுவாம்.



  

(இ-ள்) பரவுவார் தமக்கு-(மனத்தினுல் எண்ணி காயத்தினுல் தலையில் குட்டிக் கொண்டு வணங்கி) வாயினுல் துதிக்கின்றவர்களுக்கு, பரகதி கொடுக்க-(உறுதிப் பொருள் பலவற்றுள்ளும்) மேலான வுறுதிப் பொருளாகிய (துன்ப வொளிவு மின்ப வடைவும் வடிவ மாகக் கொண்ட) வீடு பேற்றைக் கொடுப்பதற்கு, பாரினில்-பூ வுலகத்தில், தடாகம்-வீதிகளில்-குளக் கரை, சிறு வீதி, பெரு வீதி யாகிய இவைகளில். விரவியே இருந்து-மனம் பொருந்தி யெழுந் தருளியிருந்து. குட்டியே-இருந்த நோக்கத்திற்குத் தக்கபடி வந்து (மனத்தினு லெண்ணி காயத்தால் தலையில்) குட்டிக் கொண்டு, வணக்கம்-(வணங்கும்) வணக்கத்தை, விருப் பொடு செய்பவர் தங்கள்-அன்புடன் செய்கின்றவர்களு டைய, உர முறு-வலிமை பொருந்திய, பாவ வினைகளைப் பாற்றி-பாபங்களையும் பாபச்செயல்களையு நீக்கி, ஒண் திரு வடியினில்-சித் ரூபமா யிலகும் வீட்டில், சேர்க்கும்-அடை விக்கின்ற, வரம் உறு-மேன்மை பொருந்திய, மதுரை-ஆலவாய் நடுவண் விளங்குங் கோயிலினுண் மிளிரும், நல் தீர்த்த கரையில்-பொற்ருமரை என்னும் திவ்விய புண் ணிய தீர்த்தக் கரையின் தென் பால், வாழ் கணபதி-என்று மெழுந்தருளியிருக்கின்ற கணபதியே, நினை - தேவரீரை, தொழுவாம் - (முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக.
(எ-று)

(வி-ரை) வழிபடும் எம்மையு மவ்வாறு செய்வீராக என்பது குறிப் பெச்சம். முற் பிறப்பி லியற்றிய நல் வினை யதனுல், தெய்வ முண்டு. வழிபட் டுய்தி பெறல் வேண்டு மென எண்ணு மன்பர்கள், தெய்வம் யாண் டுளதோ எனத் தேடி யலையாமல், ஈண் டுளது, ஈண் டுள தெனக் கண்டு, வழிபடக் காட்சிக் கெளிய னுய் நின் றருளலின், "தடாகம் வீதிகளில் இருந்து" எனவும். உயர் நிலையை யுடையவர், தாழ் வுடைய இடங்களில் தங்கார், கணபதி யாகிய இறை வனே, அன்பர்களின் பொருட்டுப் "புறம் புறந் திரியுஞ் செல்வ" னுதலின், உயர்வு தாழ்வு கருதாது அன்பர்களுய்த

லொன்றையே கருதி யாண்டுந் தங்கலின், ''விரவியே யிருந்து'' எனவுங் கூறினர். பாவ வினை உம்மைத் தொகை. அன்றிப் பாவ வினை யென்பதைப் பண்புத் தொகை யாக்கி பாப மாகிய அதிர்ஷ்டம் எனப் பொருளுரைக்கினும் நன்றே. ''பாப வினைகளைப் பாற்றி யொண் டிரு வடியினிற் சேர்க்கும்'' என்பதனால் சித்த சுத்தி முதலிய நான்கு சாதனங்களையும் முதலில் அன்பர்கட் குண்டாக்கிப், பின் பிரத்ய கபின்ன பரமாத்ம ஞானத்தால், அவர் வீடு பேற்றை யடையு மாறு கணேசர் செய்கின்றனர் என்பது வெளிப்படுகின்றது. 'திரு வடி' யென்பது, வீடு என்னும் பொருட்காதலை, ''சேவடி படரும் செம்ம லுள்ளமொடு'' (திரு முருகாற்றுப் படை ) என்னுமிடத்து, 'அடி' என்பதற்கு, நச்சினார்க் கினியர், 'வீடு' எனப் பொருள் கூறித் ''தாட்டாமரை காட்டி'' (திரு வாசகம் திருஅம்மானை.) என்பதை, மேற்கோளாக எடுத்துக்காட்டி விளக்கங் கூறுதலை யாண்டுக் கண்டு தெளிக.: சிவனு முமையு முருகனும் வந் தமர்ந் தரசு புரிய நிலைக்களமா யமைந்தமையான், ''வர முறு மதுரை'' என்றனர். அறு பத்து நான்கு திரு விளையாடலையும் இறைவன் நிகழ்த்தற் கிடமா யமைந்தமையின், ''வரமுறு மதுரை'' என்றா ரெனினு மாம்.

தன்பால் தீர்த்த மாடுபவர் எத் தகைப் பாபத்தினராயினும், அவற்றினை அறவே போக்கி, ஆக்கஞ் செய் புண்ணியத்தை ஆக்கி, அவற்றா லாம் சுத்த மனத்து இயல்பா யெழும் விவேக வைராக்கியாதிகளைத் தேக்கி, அன்னவரை முக்கிய முக்தி யடைதற்குப் பக்குவ ராக்கலின், ''நல் தீர்த்தம்'' என்றார்.

அல்லது, ''நல்'' என்பதைக் கரைக்கு அடையாக்கில், தீர்த்த மாடியதால் அத் தகைப் பக்குவ மடைந்தோர்க்குக் குரு வடிவாய் எழுந்து ஞானோபதேசஞ் செய்தருளி, அன்னவரின் அஞ்ஞான பந்தத்தை அகற்றி, ஆநந்த ரூப அமல வீட்டை அடையச் செய்யும் அருட் கணபதி எழுந்தருளி யிருக்குங் கரையாதலின், அதற்கு அவ் வடை தகு மென்க. 5



6. செக்கர்போன் றொளிரு முக்கண்மா மலையாத்
திகழ்ந்தசிந் தூரநா யகனாய்த்,
தக்கவர்க் கருளுந் தன்மையாற் பெரிய
தடங்கடற் கருணைநா யகனாய்,
மிக்கதுட் டரையு மறக்கரு ணையினால்
விரும்பியே யாட்கொளு மிறையாய்ப்,
பொக்கமில் மதுரைத் தாமரைக் கரையில்
பொலிகண பதிநினைப் பணிவாம்.

(இ-ள்) செக்கர் போன்று ஒளிரும்-செவ் வானம் போன்று சிவந்த திருமேனியோடு விளங்குகின்ற, முக் கண் மா மலையா-சோம சூரியாக்கினி யென்னு மூன்று திரு விழிகளை யுடைய பெரிய மலையாக, திகழ்ந்த சிந்தூர நாயகனாய்-விளங்கிய யானை முகக் கடவுளாகவும், தக்கவர்க்கு அருளுந் தன்மையால்-புண்ணிய முடைய அன்பர்கட்கருள் புரிகின்ற தன்மையினாலே, பெரிய தடங் கடல் கருணை நாயகனாய்-பெரிய விலாச மான கடலை யொத்த அறக் கருணையை யுடைய தலைவனாகவும், மிக்க துட்டரையும்-மிகுதியான துட்டத் தன்மையுடையவரையும், மறக் கருணையினால் - நோய் வறுமை பகைத்தல் முதலியன செய் தாளும் மறக் கருணையினால், விரும்பி ஆட்கொளும் இறை யாய்-வெறுப் பின்றி அடிமை யாக்கிக்கொள்ளுகின்ற தலைவனாகவும், பொக்க மில் மதுரை - குற்றமின்றிய மதுரைப் பதியின் (திருக் கோயிலகத் துள்ள), தாமரை கரையில் - பொற்றாமரைக் குளத்தின் தென் கரையில் மேல்பால், பொலி கணபதி - விளங்குகின்ற கணபதியே, நினை பணிவாம்-தேவரீரை (முக் கரணங்களாலும்) வணங்குவோமாக. (எ-று)

(வி-ரை) சிந்துரம்-சிந்துர; யானை, ஆக என்பது ஆய் எனத் திரிந்து நின்றது; ''கோழி கூவப் பொழுது புலர்ந்தது'' என்பது, கோழி கூவிப் பொழுது புலர்ந்தது என்பது போல, அஃது, ''வினை யெஞ்சு கிளவியும் வேறுபல்குறிய'' (தொல்காப்பியம்) என்பதனாற் பெறுதும். யானையை மலை யாகப் பருமன் நோக்கி உருவகித்தல் கவிகளின் மரபு. அது

"வருங் குன்ற மொன் றுரித்தோன்" (திருக் கோவையார்) என வருதல் முதலியவற்று லறியப்படும். விநாயகப் பெருமான் யானை முகத்துட னிருத்த லொப்புமை கொண்டு ஈண்டு, "செக்கர் போன் றொளிரும் முக்கண் மாமலையா" என விநாயகரும் மலை யென வுருவகிக்கப்பட்டனர். இவ்வாறே பிறரும் விநாயகரை. "செக்கர் போன்றொளிர் முக்கட்சி லம்பினை" (மகா ராஜத் துறவு 6) என மலை யாக வுருவகித்தல் காண்க. அன்றி, விநாயகர் விசுவ ரூபங்கொள்ளும் பொழுது பெரிய மலை போல ஓங்கி வளர்ந்து நிற்றலின், "மா மலையா" என்றனர் என்றலு மொன்று. பின் மறக் கருணை யென வருதலின், முன் 'கருணை' என்பதற்கு, 'அறக் கருணை' என யுரை யுரைக்கப்பட்டது, ஔவைப் பிராட்டியார் முதலியோரை அறக்கருணையாலும், கயமுகாசுரன் முதலியோரை மறக் கருணையாலும், ஆண்டன ரென்பது பிரசித்தம். வட கலை யல பல கலையொடு தமிழ் வளருங் கூட லாதலின், அழுக்கா றவா வெகுளி யகற்றி, யறம் வளர்வித்து இன்பம் புகுத்தி நிற்றலின், 'பொக்கமில் மதுரை' யென, மதுரை விசேடிக்கப்பட்ட தென்க. 'பொற் றுமரை' என்னும் பெயர், தாமரை என முதற் குறை யாயிற்று. 6

7. சகபதி யருள்பெற் றுயர்குரு முனிவர்
தங்கரக் கரகநன் னீரைக்,
ககபதி விரோதி தாங்குல கொடரிக்
கருளநற் காகமாய்க் கவிழ்த்த,
நகபதீ குனித்தோன் குமரனுஞ் சாமி
நாதற்கு மூத்தநல் வேழ,
முகபதி யாம்பொற் றுமரைக் கரைவாழ்
முதற்கண பதிநினைத் தொழுவாம்.

(இ-ள்) சக பதி அருள் பெற்று-உலகத்திற்கு (அபிந்ந நிமித்தோபாதாந காரண ராகிய) சிவ பெருமானுடைய திரு வருளை யடைந்து, உயர் குறு முனிவர் தம்-மேம்பட்ட அகத்திய முனிவ ருடைய, கர கரக நல் நீரை-



கையில் விளங்கும் கமண்டலத்தி லுள்ள தூய்மை யான கங்கா நீரை, கக பதி-பறவைகட்குட் சிறந்த கருடனுக்கு, விரோதி-பகையா யுள்ள ஆதிசேடனால், தாங்கு உலகொடு-தாங்கப் (சுமக்கப்) பட்ட உலகத்தைக் காப்பாற்றுதல் கருதி, அரிக்கு அருள-(நந்தந வநத்தின் பொருட்டு வேண்டிய) இந்திரனுக் கருள் செய்யு நிமித்த மாக, நல் காகம் ஆய்-நல்ல காக வடிவங் கொண்டு, கவிழ்த்த-கொட்டி(க் காவிரி யாக) ஓட விட்ட, நக பதி-மகா மேரு மலையை, குனித்தோன்-வில் லாக வளைத்த சிவபெருமா னுடைய, குமர னும்-(இளைய) புதல்வ ராகிய, சாமிநாதற்கு-முருகக் கடவுளுக்கு, மூத்த-முன் றோன்றிய, நல் வேழ முகப் பதி யாம்-நல்ல யானை முகத்தை யுடைய தலைவ னாகிய, பொன் தாமரைக் கரை வாழ்-(மதுரைச் சொக்கநாதர் கோயிலினுள் விளங்கும்) பொற் றுமரைக் குளத்தின் தென் கரையின் மேல்பால் எழுந்தருளியிருக்கும், முதல் கண பதி-உலக காரண ராகிய கண நாதரே, நினைத் தொழுவாம்-தேவரீரை (அநர்த்த நிவிர்த்தி யாநந்த பிராப்தி வடிவ வீடு குறித்து முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)

"முனிவர் வந்தார் அகத்தியனும் வந்தான்" எனத் தலைமை தோன்ற நூல்களுள் அகத்தியரை வேறு பிரித்துக் கூறல், அருந் தவம் புரிந்து சிவபெருமான் திரு வருளைப் பெற் றுயர்வு பெற்றமையினு லாகும். என்பதை விளக்க, சகபதி யருள் பெற் றுயர் குறு முனிவர்" என்றனர். சிவபெருமான் திருமணத் தன்று முனிவரும் தேவரும் ஒருங்கு கூடிய தன்மையால் வட திசை தாழத் தென்றிசை யுயரச் சிவ பெருமான் ஆணையைத் தலைமேற் றுங்கித் தென் றிசை வந்து சமப்படுத்தினதும், இந்திரன் வேண்டக் கடலை யுழுந் தள வாக வுருட்டி யுட்கொண்டதும், விந்திய மலையை யடக்கியது முதலியவற்றல் தோன்று முயர்வு அகத்தியர்பாற் றோன்றுதல் காண்க. இவர் தவத்தாலும் அறிவாலும் உயர்ந்தவ ராயினும், வடிவத்தால் மிகக் குறுகியவர் என்பது தோன்ற, "உயர் குறு முனிவர்" என்

"வருங் குன்ற மொன் றுரித்தோன்" (திருக் கோவையார்) என வருதல் முதலியவற்ரு லறியப்படும். விநாயகப் பெருமான் யானை முகத்துட னிருத்த லொப்புமை கொண்டு ஈண்டு, "செக்கர் போன் றொளிரும் முக்கண் மாமலையா" என விநாயகரும் மலை யென வுருவகிக்கப்பட்டனர். இவ்வாறே பிறரும் விநாயகரை. "செக்கர் போன்றொளிர் முக்கட்சி லம்பினை" (மகா ராஜத் துறவு 6) என மலை யாக வுருவகித்தல் காண்க. அன்றி, விநாயகர் விசுவ ரூபங்கொள்ளும் பொழுது பெரிய மலை போல ஓங்கி வளர்ந்து நிற்றலின், "மா மலையா" என்றனர் என்றலு மொன்று. பின் மறக் கருணை யென வருதலின், முன் 'கருணை' என்பதற்கு, 'அறக் கருணை' என யுரை யுரைக்கப்பட்டது, ஒளவைப் பிராட்டியார் முதலியோரை அறக்கருணையாலும், கயமுகாசுரன் முதலியோரை மறக்கருணையாலும், ஆண்டன ரென்பது பிரசித்தம். வட கலை யல பல கலையொடு தமிழ் வளருங் கூட லாதலின், அழுக்கா றவா வெகுளி யகற்றி, யறம் வளர்வித்து இன்பம் புகுத்தி நிற்றலின், 'பொக்கமில் மதுரை' யென, மதுரை விசேடிக்கப்பட்ட தென்க. 'பொற் ருமரை' என்னும் பெயர், தாமரை என முதற் குறையாயிற்று. 6

7. சகபதி யருள்பெற் றுயர்குரு முனிவர்
தங்கரக் கரகநன் னீரைக்,
ககபதி விரோதி தாங்குல கொடரிக்
கருளநற் காகமாய்க் கவிழ்த்த,
நகபதீ குனித்தோன் குமரனுஞ் சாமி
நாதற்கு மூத்தநல் வேழ,
முகபதி யாம்பொற் ருமரைக் கரைவாழ்
முதற்கண பதிநினைத் தொழுவாம்.

(இ-ள்) சக பதி அருள் பெற்று-உலகத்திற்கு (அபிந்ந நிமித்தோபாதாந காரண ராகிய) சிவ பெருமானுடைய திரு வருளை யடைந்து, உயர் குறு முனிவர் தம்-மேம்பட்ட அகத்திய முனிவருடைய, கர கரக நல் நீரை-



கையில் விளங்கும் கமண்டலத்தி லுள்ள தூய்மை யான கங்கா நீரை, கக பதி-பறவைகட்குட் சிறந்த கருடனுக்கு, விரோதி-பகையா யுள்ள ஆதிசேடனால், தாங்கு உலகொடு-தாங்கப் (சுமக்கப்) பட்ட உலகத்தைக் காப்பாற்றுதல் கருதி, அரிக்கு அருள-(நந்தந வநத்தின் பொருட்டு வேண்டிய) இந்திரனுக் கருள் செய்யு நிமித்த மாக, நல் காகம் ஆய்-நல்ல காக வடிவங் கொண்டு, கவிழ்த்த-கொட்டி(க் காவிரி யாக) ஓட விட்ட, நக பதி-மகா மேரு மலையை, குனித்தோன்-வில் லாக வளைத்த சிவபெருமா னுடைய, குமர னும்-(இளைய) புதல்வ ராகிய, சாமிநாதற்கு-முருகக் கடவுளுக்கு, மூத்த-முன் றோன்றிய, நல் வேழ முகப் பதி யாம்-நல்ல யானை முகத்தை யுடைய தலைவ னாகிய, பொன் தாமரைக் கரை வாழ்-(மதுரைச் சொக்கநாதர் கோயிலினுள் விளங்கும்) பொற் ருமரைக் குளத்தின் தென் கரையின் மேல்பால் எழுந்தருளியிருக்கும், முதல் கண பதி-உலக காரண ராகிய கண நாதரே, நினைத் தொழுவாம்-தேவரீரை (அநர்த்த நிவிர்த்தி யாநந்த பிராப்தி வடிவ வீடு குறித்து முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)

"முனிவர் வந்தார் அகத்தியனும் வந்தான்" எனத் தலைமை தோன்ற நூல்களுள் அகத்தியரை வேறு பிரித்துக் கூறல், அருந் தவம் புரிந்து சிவபெருமான் திரு வருளைப் பெற் றுயர்வு பெற்றமையினு லாகும். என்பதை விளக்க, சகபதி யருள் பெற் றுயர் குறு முனிவர்" என்றனர். சிவ பெருமான் திருமணத் தன்று முனிவரும் தேவரும் ஒருங்கு கூடிய தன்மையால் வட திசை தாழத் தென்றிசை யுயரச் சிவ பெருமான் ஆணையைத் தலைமேற் ருங்கித் தென் றிசை வந்து சமப்படுத்தினதும், இந்திரன் வேண்டக் கடலை யுழுந் தள வாக வுருட்டி யுட்கொண்டதும், விந்திய மலையை யடக்கியது முதலியவற்ருல் தோன்று முயர்வு அகத்தியர்பாற் றோன்றுதல் காண்க. இவர் தவத்தாலும் அறிவாலும் உயர்ந்தவ ராயினும், வடிவத்தால் மிகக் குறியவர் என்பது தோன்ற, "உயர் குறு முனிவர்" என்

றனர். இவ் வாறே தவ முதலியவற்று லுயர்ந்தும் வடிவாற் குறுகியு முள்ள பெரியோர்களை, "சிறு மாமனிசர்" (திரு வாய் மொழி) எனச் சான்றோர் கூறுதலுங் காண்க. இந்திரன் பொருட் டாக அகத்தியர் கமண்டல நீரை விநாயகப் பெருமான் காக வடிவங் கொண்டு கவிழ்த்தனர் என்பது.

"சுரர்கு லாதிபன் றாய்மலர் நந்தநம்,
பெருக வார்கடல் பெய்தவ யிற்றினேன்,
கரக நீரைக்க விழ்த்தம தகரி,
சரண நாளுந்த லைக்கணி யாக்குவாம்.

(பிரபு லிங்க லீலை)

என வரும் பாவாலும் அறியப்படுதல் காண்க. "தாங்குலகொடு" என்பதி லுள்ள 'ஒடு' அசையாய் நின்றது "வேலொடு நின்றான்"(வள்ளுவர் 56-27)என்புழிப் போல இனி, "ஒடு" வை, எண்ணுப் பொருளில் வந்த தாகக் கொண்டு உலகத்திற்கும், அரிக்கும் அருள் புரிய என வுரைப்பினும் பொருந்தும். எண்ணொடு பலவற்றை யெண்ணும் போது ஒவ் வொன் றனோடும் வருதலே யன்றி, ஈற்றி லொன்றனோடுநின்று பிரிந்து எல்லா வற்றோடும் கூடியும் எண்ணைக் குறித்திய லும் என, "என் று மெனவு மொடுவு மொரோவழி, நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்" (நன்னூல்) என்பது முதலியவற்று லறியப்படுவ தன்றி, அஃது முதலில் ஒன் றனோடு நின் று பிரிந்து, பின் வரு மெல்லா வற்றோடுங் கூடி யெண்ணுக் குறித் தியலு மென அறியப்பட வில்லையே யெனின், "அருகிக் கலியோ டகவன மருங்கின்" (யாப்பருங் கலக் காரிகை) என்பது முதலிய சான்றோர் வழக்கின்கண், முதலில் நின்று லும் பின் வருவனவற்றோடும் பிரிந்து கூடி யெண்ணுக் குறித் தியலுதல் காண்க. முதல்- ஐசுவரியம். ஈண்டு அஃது ஐசுவரிய மாகிய விபூதியை யுணர்த்திற்று. எனவே விபூதி விநாயகர் என, 'முதற் கணபதி என்பதற் குரை கொள்ளல் சாலும். இனிப் பொற் றாமரைத் தடாகத்தில் மூழ்கி யெழுந்து வலமாகக்



கோயிலி னுட் புகுவார் முதலில் வழிபட வெழுந்தருளி யிருக்குங் கணபதியாதலின், 'முதற் கண பதி யென்றன ரென்றலு மொன்றும். 7

8. மதுரமா யெவரும் புகழ்ந்துவந் தடைய
வருபவர் தங்களை மறித்து,
விதுரனென் றுலகோர் துதிப்பதற் குரித்தாய்
வினவிடல் போலவீ திகளிற்,
சதுரம தாக நரகய வுருவாய்ச்
சார்ந்தநல் வளத்தொடு மருவும்,
மதுரையின் பொற்று மரைத்தடக் கரையில்
வாழ்கண பதிநினைத் தொழுவாம்.

(இ-ள்) மதுரம் ஆய்-இனிமை யாக, எவரும்-புகழ்ந்து-(சைவ வைஷ்ணவர்கள்) யாவரும் துதித்துக் கொண்டு, வந் தடைய-வந்து (வணங்கி) வேண்டுவனவற்றைப் பெற. வருபவர் தங்களை-தனக் கெதிரே (பராக்காக) வருபவர்களை, மறித்து-(அவர்களை நோக்கம் போலப் போகவிடாமல்) தடுத்து, விதுரன் என் று-(இப் பெருமான் நல்ல) அறிஞர் என்று கருதி, உலகோர் துதிப்பதற்கு- உலகத்தார்கள் புகழுவதற்கு உரித் தாய்-உரிய இலக் காகி, வினவிடல் போல-(பெறுதற் கரிய மக்கட் பிறவியாற் பெறத் தக்கது இஃது என ஆராய்ந் தடைய முயலாமல் வீணாக எங்கே செல்கின்றீர்? என்னை வழிபட்டால் எல்லா மடைவீரே ஏன் வழிபடாது செல்கின்றீர், என கேட்பது போல, வீதிகளில்-தெருக்களிலே, சதுரம தாக-சாமர்த்தியத் துடன், நர கய வுரு வாய்-மனித வடிவும் யானை வடிவும் பூ தவடிவும் கலந்த வடிவு கொண்டு, சார்ந்த-எழுந்தருளி யிருந்து அருள்புரிகின்ற, நல் வளத்தொடு மருவும் மதுரை- சிறந்த வளப்பத்தோடு பொருந்தி விளங்குகின்ற மதுரைப் பதியி லுள்ள (திருக் கோயிலின்கண் விளங்கும்), இன் பொன் தாமரைத் தட கரையில்-இனிய பொற் றாமரைக் குளத் தென் கரை மேல்பாற்கண்ணும், வாழ் கணபதி-

எழுந்தருளியிருக்கின்ற விபூதி விநாயகரே, நினை தொழுவாம்-தேவரீரை (முத் தாப நீங்க முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை) 'மதுரமா யெவரும் புகழ்ந்து வந்தடையவாழ் கணபதி, சார்ந்த கணபதி' யெனக் கூட்டுக. மதுரம் 'ஆக' என்பது, மதுரம் 'ஆய்' எனத் திரிந்து நின்றது. நாரையின் வேண்டுகோளால் மீன் முதலியன தோன்றாமையானும், முழுகுவார் பாபங்களை முற்றும் போக்கலானும், புண்ணியத்தைத் தருதலானும், "இன் பொற் றாமரை" எனக் கூறப்பட்ட தென்க. வீதிகளிலும், குளக் கரைகளிலும், எழுந்தருளி எளியரா யிருந் தருளு மியல்பினர் விநாயகர் என்பது இப் பாவாற் றோன்ற வைத்தனரென்க. இக் கருத்தினை, 'பரவுவார் தமக்கு' என்னும் பாவில், முன் வெளிப் படையாக விளக்குதலுங் காண்க. இனி 'எவரும்' என்பதற்கு, அறம் பொரு ளின்பம் வீடு என்பனவற்றை யடைய விரும்பும் எல்லாரும் எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

8

9. ஒருவரும் வெறுத்த லின்றியே யிருக்கு
முலகினைப் பொய்யென வெறுத்து,
திருவருள் பெற்றுச் சிந்தையின் றுயரைத்
தீர்த்திட முயல்பவர் தமக்கு,
மருவருந் துறவே யுரியதென் றுணர்த்த
வல்லப சத்தியை நீக்கிப்,
பொருவரும் பொற்றா மரைக்கரை வதியும்
பூதியார் கணேசநிற் பணிவாம்.

(இ-ள்) ஒருவரும்-உலகி லுள்ள யாவரும், வெறுத்தல் இன்றியே இருக்கும் உலகினை-வெறுக்காமலே இருக்கும்படியான உலகத்தை, பொய் என வெறுத்து-மித்தையென உவர்ப்படைந்து, திரு வருள் பெற்று - (தேவரீருடைய) திரு வருளை யடைந்து, சிந்தையின் துயரை-மனதின்கண் வந் தடையும் துன்பங்களை, தீர்த்திட முயல்பவர்



தமக்கு - நீக்க முயற்சிக்கின்றவர்களுக்கு, மருவ அரும் துறவே-எல்லாரானு மடைதற் கரிய கடின நெறியாகிய துறவற நெறியே, உரியது என்று உணர்த்த-தக்க நெறியாகும் என் றறிவிப்பதற் காக, வல்லப சத்தியை நீக்கி-வல்லபை யென்னுந் தேவியை விட்டுப் பிரிந்து, பொருவு அரும்-ஒப் பில்லாத, பொன் தாமரை கரை வதியும்-(மதுரைத் திருக் கோயிலி னுள் விளங்கும்) பொற் றாமரைக் குளத் தென் கரையின் மேல்பாலில் எழுந்தருளியிருக்கின்ற, பூதி ஆர் கணேச - (திரு மேனி முழுதும்) விபூதி யணிந்த கணேசப் பெருமானே, நின் பணிவாம்-தேவரீரை (முக் கரணங்களாலும்) வணங்குவோமாக. (எ-று)

(வி-ரை) ஞானிகட் குலகில் சத்திய தோற்றமின்மையின், 'ஒருவரும்' என்பது, அவ ரொழிந்த பிறரனைவரையும் குறித்து நின்றது. 'உலகினை' என்பது. இக அமுத்திர பலங்களை ஆகு பெயரா யுணர்த்திற் றென்க. "பொய்யென வெறுத்து...... முயல்பவர்" என்பது. "நித்தியா நித்திய வத்து விவேகராய் இகாமுத்திர பல போக விராகராய்ச் சமாதி சட்கம் பெற்று மோட்ச மடைய விரும்புபவர்கள் எனப் பொருள் கொள்ளத் திகழ்கின்றது. நான்கு சாதனங்களையும் பெறுவதற்கும். ஞானத்தை அடைவதற்கு முரிய சிறந்த நிலை துறவறமே என்பது குறிப்பு. துயர்-தாபத் திரயங்கள், 'துறவே' ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. இதனாற் பிரிக்கப்பட்டவை இல் லற முதலியன வென்க. இறை வழிபாடுடையவர்கட்கே நான்கு சாதநங்களு முரம் பெறும் என்பார், "திரு வருள் பெற்று" என்றனர். 'திரு வருள் பெற்று உலகினை வெறுத்து, சிந்தையின் துயரைத் தீர்த்திட முயல்பவர்' எனக் கூட்டி முடித்தலே தகும். அடியவர் எச் சாதனத்தைக் கொண்டால் நலம் பெறுவரோ, அச் சாதனத்தைத் தான் கைக் கொண்டு காட்டுவது இறைவ னியற்கையா மாதலின், "உணர்த்த வல்லப சத்தியை நீக்கி வதியும் கணேசர்" என்றனர். இக் கருத்து, "இரந்துண்ணி இரந்துண்ணி யென்பர் ....

நிரந்தரந் தன்னடி நினேயு மடியவர், இரந்துண்டு தன்னடி யெட்டச்செய் தானே.'' (திரு மந்திரம் 1882) என்பதனுனும் வெளிப்படுதல் காண்க தேவர் வேண்டச் சொக்க லிங்கப் பெருமான் தன் சூலாயுதத்தை நாட்டி யுண்டாக்கப் பெற்ற தன்மையால், பிற தீர்த்தங்கட் கில்லாப் பெருமை இதற் குண் டென்பார், ''பொரு வரும் பொற்ருமரை'' என்றனர். 'வதியும் கணேசர்' என்பது பெயரெச்சத் தொடர். செய்யும் என்னு முற்றுப் போல, அவ் வெச்சமும் ஒரோ வழி நிகழ் காலமு முணர்த்து மாகலின், வதிகின்ற கணேசர் எனப் பொருள்படவே, 'வதியும் கணேச' என்றனர், ''முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச், செப்புவர் நிகழுங் காலத் தானே''. என (நன்னூல்) விதி யிருத்தலின் என்க. 9

10. பவத்தனிக் குரையார் பரவையை ஞானப்
படுவையைக் கொடுகடப் பன்றித்,
தவத்தனி முயற்சி செய்யினு மதனைத்
தாண்டிடல் பிறிதினு லரிதென்,
சிவத்துயர் மறையின் கருத்தைச்சிஞ் ஞாசு
செவ்வனே யுணர்ந்துய்ய வருள்வான்,
விவத்தறு மதுரைப்பொற் ருமரைக் கரைவாழ்
விபூதியார் கணேசநிற் பணிவாம்.

(இ-ள்) தனி பவ குரை யார் பரவையை-ஒப்பற்ற பிறப் பாகிய (சம்ஸார மாகிய) ஒலி யெழும்பும்படியான கடலை, ஞாந படுவையைக் கொடு-(ஆத்தும தத்துவ) ஞாந மாகிய கப்பலைக் கொண்டு (கப்பலால்), கடப்பு அன்றி-தாண்டுதற் கியலுமே யல்லாமல், தனி தவ முயற்சி செய்யினும்-நிக ரற்ற மிக்க முயற்சியைச் செய்தாலும், பிறிதினுல்-(தத்துவ ஞாந மல்லாத) கர்ம முதலிய வேறு பிறவற்றினுல், அதனை கடத்தல் அரிது என்-அச் சம்ஸார சாகரத்தைத் தாண்டுதல் முடியாது என்று கூறுகிற,



சிவத்து உயர் - மங்கள வடி வாய் உயர்ந்த, மறையின் கருத்தை - வேதங்களி னுடைய ஆசயத்தை, சிஞ்ஞாசு செவ்வனே உணர்ந்து - முமூக்ஷுவானவன் நன்ருகத் தெரிந்து, உய்ய அருள்வான்-உய்வதற்கு அருள்புரியவே, விவத்து அறு-ஆபத்து (இடையூறுகள்) இல்லாத, மதுரை-ஆலவாய் (த் திருக் கோயிலி னுள் விளங்கும்), பொன் தாமரை கரை வாழ் - பொற் ருமரைக் குளத் தென் கரை மேல்பால் எழுந்தருளி யிருக்கின்ற, விபூதி யார் கணேச-(திரு மேனி முழுவதும்) விபூதி நிறைந்த கணேசப் பெருமானே, நின் பணிவாம்-தேவரீரை (முக் கரணங்களா லும்) வணங்குவோ மாக. (எ-று)

(வி-ரை) எல்லை யின்றி வருதலின் பிறவிக் கடலைத், 'தனி பரவை' எனவும், வறுமை நோய் முதலியவற்ருல் துன்ப வொலியும், மகப் பேறு, பொருட் பேறு முதலிய வற்ருல், இன்ப ஒலியு முடைமையின், 'குரை யார் பரவை' எனவும் கூறினர். ''குரை யார் பரவை'' எனக் கடற் கேற்ற அடை கொடுத்தா ரெனினு மாம். எல்லை யின்றி வருதலின், பிறவிக் கடலை, ''பிறவிப் பெருங் கடல்'' (திரு வள்ளுவர் 1-10) எனப் பிறரும் இவர் போல அடை கொடுத்துக் கூறல் காண்க. இச் சம்சாரம் இன்ப துன்ப வொலி யுடைய தென்பதை,

''மறையோர் வாழு மப்பதியின்
மாட வீதி மருங்கணேவார்,
நிறையுஞ் செல்வத் தெதிர்மணேக
ளிரண்டி னிகழ்மங் கலவியங்கள்,
அறையு மொலியொன் றினிலொன்றி
லழுகை யொலிவந் தெழுதலுமங்,
குறையு மறையோர் களையிரண்டு
முடனே நிகழ்வ தென்னென்ருர்.''
(13-வது வெள்ளானைச் சருக்கம் கவி 5) என வரும் பெரிய புராணச் செய்யுளாலும்,

''ஓரி னெய்தல் கறங்க வோரில்,
ஈரந் தண்முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்,
பைத லுண்கண் பணிவார் புறைப்பப்,
படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்,
இன்னு தம்ம விவ்வுலகம்,
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே.
(திணை-பொது வியல், துறை-பெருங் காஞ்சி. இது பக் குடுக்கை நன் கணியார் பாட்டு.)

என வரும் புற நா னூற்றுச் செய்யுளாலும் அறிக. குரை-ஒலி. தவ-மிக. 'என் மறை' எனக் கூட்டுக. 'என் மறை' வினைத் தொகை. 'சிவத்து' அத்துச் சாரியை, சிவம் என்பதும், 'உயர்' என்பதும், மறைக்கே விசேடணம். ஓதுவாரையும், தான் விதித்த விதிப்படி நடப்பாரையும், மங்கள முடையவ ராக்குதலுடன் ஓதப்படு மிடங்களையும் மங்கள முடையன வாக வாக்குதலின், 'சிவ மறை' யென வும், எத் துணை யிடையூறு புகினும் தாழ் வடையா துயர்ந் தோங்குதலின், 'உயர் மறை' எனவும், 'மறை' விசேடிக்கப்பட்டது என்க. 'உய்ய' என்பது காரியப் பொருட்டாதலின், எதிர் காலத்தில் வந்தது. 'நெல் விளைய மழை பெய்தது' என்பது போல என்க. ''பிர்மைவாகம்'' என்றது, ''தேகோகம்'' எனற் கேது வாகிய அஞ்ஞானத் தால் பிறவிக் கடல் (சம்ஸார சாகரம்) பெருகுகின்றது. அஞ்ஞாந நாசத்தால் சம்ஸார நாசமுஞ் சேர வுண்டா மென்பதும். அஞ்ஞாந நாசத்தை யுண்டு பண்ணுவது தத்துவ ஞாந மன்றிப் பிறி தன்று என்பதும், பெறப்பட, ''பவத் தனிக் குரை யார் பரவையை ஞாநப் படுவையைக் கொடுகடப் பன்றி...... பிறிதின லரிது'' என்றனர். இக் கருத்து, ''துங்க ஞாநமே கரும அஞ்ஞானத்தைச் சுடு கின்ற நெருப்பாமே''. (கைவல்ய நவநீதம் 2-70) என்பது முதலிய நூற் பிரமாணங்களால் நன்கனம் தெளிவாதல் காண்க.



மதுரை, விபூதிக் கண பதி தோத்திரமும்,
சிதம்பரம், கோ. சித மடம், சிதம்பர சுவாமிகள் மாணுக்கர்,
மதுரை, தமிழ்ச் சங்கத்து பண்டித, திரு வை யாறு,
அறுபத்து மூவர் மடம், ஸ்ரீநாராயண சுவாமிகள் இயற்றிய,
நுந்தா வொளி (நித்தியப் பிரகாசம்) என்னும் உரையும்
முற்றுப் பெற்றது.
இடையூறு நீங்கி இனிது வாழ்க.

---

உ
ஸ்ரீ கிருஷ்ணய பரப் பிரஹ்மணே நம:
தில்லைத் திருச் சித்திர கூடம்
கோவிந்த ராஜப் பெருமாள் தோத்திரமும்,
நுந்தா வொளி (நித்தியப் பிரகாசம்) என்னும் உரையும்.

---

திரு மங்கை ஆழ்வார் சரித வாயிலாகப்
பத்தியை உணர்த்தல்.

1. எல்லையில் பவத்தை யினியுரு வண்ணம்
எழில்மங்கை மன்னனுக் கருளத்,
தொல்லையில் விரலைச் சுவைத்திடச் செய்து
சொருபத்தை யளித்தது போலக்,
கல்லையேய் மனதைக் கனிவுறப் புரியக்
கனகவம் பலத்தய லயரும்,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமாள்
திருவடி களைத்திநந் தொழுவாம்.

(இ-ள்) எல்லையில் பவத்தை - முடி வில்லாத பிறவியை. இனி யுரு வண்ணம்-(தக்க இன்ன தகாதன இன்னவென் றணரும் உணர் வற்ற விலங்கு முதலியவற்றின் வேறுபட்ட மக்கட் பிறப் பெய்திப் பிறவா திருக்கச் செய்யு மருந் திஃ தெனத் தெரிந்த) இனி மேலு மடையாத படி, எழில் மங்கை மன்னனுக்கு அருள-மன வெழுச்சி படைத்த திரு மங்கை மன்ன ராகிய (ஆ றங்கந் தமிழ் செய்த) ஆழ்வார்க் கருள் பாலிக்கத் திரு வுளம் பற்றி, தொல்லையில் விரலை சுவைத்திடச் செய்து-பிறவித் துன் பங்களை யில்லை யென்னும்படி யடியவர்க் கருளுகின்ற திருக் கை விரலைத் திரு வாழி கழற்றும் வாயி லாகச் சுவைக் கும்படி செய்து (அது முன்னிலை யாக அஸ்த மஸ்தக சையோகம் பெறச் செய்கையால் மல விக்ஷேப தோடங்களை யும் நீங்கும்படி செய்து), சொரூபத்தை யளித்தது போல- பின்னர்த் திரு மந்திரத்தை யுபதேசித்தலால் ஆவரண நீங்கப் பிரத்திய கபிந்ந பிரம சொருபத்தை யறியும்படி தத்துவ ஞாநத்தை யளித்தது போல, கல்லை ஏய் மனதை கனிவுறப் புரிய - தோடங்களோடு கலந்தமையால் கல்லை யொத்த கடின மான அடியேங்கள் மனங்களை மெய் ஞாநம் பதியு மாறு செயற்கை யாகிய அத் தோடங்கள் நீங்க இளகிச் சத்துவ வடி வாகப் பழையபடி இருக்கத் திரு வருள் பாலிப்பதற் காக, கனக அம்பலத்து அயல் அயரும்-பொன் னம்பலத்தில் திருக் கூத்தப் பெருமான் குனிக்குந் திருக் கூத்தை நெடும் பொழுது விழித் திருந்து பார்த்தலால் அவ் வம்பலத் தருகே அயர்ந்து தூங்குவது போல அறிதுயில் புரிகின்ற, தில்லை நல் கோவிந்த ராஜப் பெருமாள்-தில்லைத் திருச் சித்திர கூடத்தில் கிடந்த திருக் கோலத்தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோவிந்த ராஜப் பெருமா னுடைய, நல் திரு வடிகளை நிதம் தொழுவாம்-(பிறவிப் பிணிக்கு மருந்தாகிய) திரு வடித் தாமரை மரை மலர்களை நா டோறும் வணங்குவாம். (எ-று)



(வி-ரை) பி றவி கரை யின்றிப் பெருகுதலால், ''எல்லையில் பவம்'' எனப்பட்டது. வள்ளுவரு மிக் கருத்து வெளிப்படவே, ''பிறவிப் பெருங் கடல்'' என்றனர். மக்கட் பிறப்பின் சிறந்த பயன், இன்னற் பிறவி யொழித் தின்ப வீ டெய்தலா மாதலால், ''பவத்தை யினி யுரு வண்ணம்'' என்றனர். 'உரு' என்ப தீறு கெட்ட வெதிர்மறைப் பெய ரெச்சம்.

குமுத வல்லியார் திரு வுள்ளப்படி அந்தண ராகிய திரு மா லடியவர்கட்குத் ததி யாராதனை செய்வதிலும், திரு வரங்கப் பெருமான் திருக் கோயிலின் திருச் சுற்றுக் களைக் கட்டி முடிப்பதிலும், பிற திருப் பணிகளைச் செய்வதிலும், உள்ளக் கிளர்ச்சி யுடைய ராக இருந்தமை யால், ''எழில் மங்கை மனனன்'' என அவரைக் குறிப் பிட்டார். எழில்-மன வெழுச்சி. அவர், ததி யாராதனை செய்வதால், பொரு ளெல்லாங் குறைந்த காலத்தும், அப் பணி செய்வதில் தளரா திருந் தியற்றின ராதலால், அவ் வா று குறிப்பிட்டன ரென்க

தில்லைத் திருச் சித்திர கூடத்திற்கு மங்களசாசனஞ் செய்த ஆள்வார்கள் இருவரிலும், திரு மங்கை யாழ்வா ரைச் சிறப் பாகக் கருதியமையால், அவர்க் கருளியது போல என, அவர் திரு வரலாற்றைக் குறிக்கக் கருதின ரென்க.

திரு மங்கை யாழ்வார்க்கு அஸ்த மஸ்தக சையோகம் பெறச் செய்து, மல விக்ஷேபங்களைப் போக்கி. நாராயண மந்திரத்தை யுபதேசித்து, ஆவரண தோடத்தை நீக்க வல்ல தத்துவ ஞாநத்தை யளித்தமையால், எனக்கு மவ்வா று செய்க என்பதற் காக அவ் வா று கூறின ரென்க.

விரல் என்பது திருக் கையில் ஆழி (மோதிரம்) அணிந் திருக்கும் விரல் எனப் பொருள் கொள்க. அவர் திரு வர லா று அவ் வா று குறிக்கின்றது.

இனி அது, பிராட்டியாரது கால் விரல் என்றும் கன்ன பரம்பரையா லறியப்படுகின்றது.

எட்டாம் பாவில் விளங்கக் கூறுங் கருத்தை இங்கு ''அயரும்'' என்பதனுற் குறிப்பித்தமையால், அக் கருத்தை இங்கும் விளங்க எழுதினன் என்க.

பொன்னிற் செம்பு கலந்தா லஃது கடின மாதல் போல், சத்துவ வடிவ மனம் ரஜோ தம குணக் கலப்பால் கடின மாயது என்பார், ''கல்லே யேய் மனம்'' என்றனர்.

வன் னிலம், நீரால் மென் னில மாக வாகிய வழியே, விதை, கன்றுகளை நடுவதற்குத் தகுதிப்படல் போல, ரஜோ தமோ குணக் கலப்பால் வன்மை யுறு மனதை, அருளால் சத்துவ சுய வடி வாகிய மெல்லிய நிலையுடைய தாக ஆக்கின், தத்துவ ஞாநம் பதியும் என்பார், ''கனி வுறப் புரிய'' என்றனர். ஆகுபெ யராகச் சொரூபத்தை என்பது சொரூப ஞாநத்தை யுணர்த்திற்று என்க.

திரு மங்கை யாழ்வார் திரு வாலி என்னும் திருப் பதியி னண்மையி லுள்ள திருக் குறையி லூர் என்னும் பதியி லிருந்து, குறு நில மன்ன ராக ஆட்சி புரிந்த நீலன் என்னும் அரசன் புதல்வர், கள்ளர் குலத்தினர். குமுத வல்லி அழகி லீடுபட்டு அவள் சொற்படி சைவத்தி லிருந்து வைணவத்திற்கு, இட்டுப் பிறந்தமையால், மாறித் திரு மா லடியவர்கட்குத் ததி யாராதனை செய்து பொரு ளெல்லா மிழந்தமையால், அவ் வாராதனையை விடாது செய்வதற்காக வழிப் பறி செய்தல் முதலிய செயல்களால் பொருளை யீட்டியவர். திரு மா லவர் நிலையைக் கண்டு பிராட்டியருடன் தாமும் அணி மிகப் பூண்டு அந்தணர் கோலத்துடன் வர, அவ ரணிகளை யெல்லாம் எடுத்துக் கொண்டு, கை விரலி லுள்ள மோதிரத்தை நீயே கழற்றிக் கொள் ளெனப் பெருமாள் கூறக் கேட்டுத் தா னும் கழற்ற முடியாமையால் பல்லாற் கடித்துக் கழற்றத் தொடங்



கினர். தொடங்கியு முடியாமையால் 'நீ யொரு மந்திர வாதி அம் மந்திரத்தை யெனக்குச் சொல்லுதி. சொல்லா யேல் இத் தடியால் புடைப்பேன்' எனப் பய முறுத்தப் பெருமாள் திரு வுளங் களித்துச் செவியில் திரு மந்திரத்தை யுபதேசிக்க உண்மை யுணர்ந்து வருந்தி நிற்க. இறைவன் நம் திரு வரங்கத்தில் திருச் சுற்றுக்களைச் செவ்வை யாக ஆக்குதி, யெனத் திரு வாய்மலர்ந்து அகல, அவ் வாறே செய்து திவ்ய திருப் பதிக ளெல்லாஞ் சென்று இறை வனைப் பாடிப், பரகாலர், ஆலி நாடர், கலியர் என்பன முதலிய விருதாவலி நாமங்களைப் பெற்றுக் குமுதவல்லி யம்மையாருடன் மகிழ்ந்து வாழ்ந்தவர் ஆவார். இவர் பாடிய பாக்களின் தொகுதி ''பெரிய திரு மொழி'' 1
எனப் பெயர் பெறும் எனக் காண்க.

### அர்ஜ்ஜுநன் வாயி லாகப் பக்தியை உணர்த்தல்.

2. வில்லினை யுடைய விஜயனைத் தேரில்
வெறுப்பதா மயலினைப் போக்கி,
மெல்லவே மனதைத் தூய்மைசெய் விசுவ
ரூபத்தை விளக்கிய தகைபோல்,
அல்லலில் எனக்கும் ஆநந்தம் அருளத்
தென்றிசை தலைவைத்தே யயரும்,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமாள்
திருவடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) வில்லினை யுடைய விஜயனை - வில்லே ருழ வரிற் சிறந்த அருச்சுனனை, தேரில்-(அவன் பெருந்) தேரில் (போர்ச் செவ்வி யுடையவ னாக இருக்கும்போ துண் டான), வெறுப்பதா மயலினை-வெறுக்கத் தக்க (அவனு டைய) மயக்கத்தை, போக்கி-நீக்கி, மெல்லவே மனதைத் தூய்மை செய்-போரினைத் தவிர்தல் அரசர் குலத்திற் பிறந்த நினக்குத் தகுதி யன்று எனப் பல நியாயங்களை விரையாம லெடுத்துக் காட்டி அவன் மனதைத் தூய்மைப் படுத்தி,

நல் விசுவ ரூபத்தை-நல்ல விசுவ ரூபத்தை, விளக்கிய தகை போல்-விளக்க மாகக் காட்டித் (தத்துவ ஞானத்தை யுண்டாக்கி இன்ப வடி வாக்கிய) தன்மை போல, எனக்கும்-அடியேற்கும், அல்லலில் ஆநந்தம் அருள - துன்ப வொழிவா மின்ப வடி வாக இருத்தலை யருள, தென் திசை தலை வைத்து அயரும்-சீரங்க முதலிய திருக் கோயில் களிற் போலாது. கீழ்த் திருப் பதி முதலியவற்றிற் போல தென் திசையில் தலையை வைத்து அறி துயில் புரிகின்ற. நல் தில்லை கோவிந்த ராஜப் பெருமாள் - தில்லைத் திருச் சித்திர கூடத்தில் கிடந்த திருக் கோலத்தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோவிந்த ராஜப் பெருமானுடைய, திரு அடிகளை நிதம் பணிவாம்-(பிறவிப் பிணிக்கு மருந்தாகிய)திருவடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங்குவாம். (எ-று)

(வி-ரை) வில்லாளிகளில், நெடிய சிலை இராமனைப் போலச் சிறந்தவன் அருச்சுன னுதலால், "வில்லினை யுடைய விஜயனை" என்றனர். ஒடியாத தண்டும், அறுத நாணும், ஒய்வுறாத தூணியும் பெற்றவ னுதலின், அத் தன்மை யுடையவ னென்பதைக் குறிக்க, 'வில் லுடை விஜயன்' என்றா ரெனினு மாம். அன்றிப் போர் புரியுஞ் செவ்வி யுடையவ னுகத் தேரி லமர்ந்தவன் என்பதைக் குறிக்க, 'வில் லுடை விஜயன்' என்றா ரெனினு மாம்.

அர்ச்சுனன் இறைவனிடத் தன்றி வேறு எங்கும் வெற்றி கொண்டதைத் தவிரத், தோற்றவ னல்லன். அவ னிப்போதும் வென்றே திருவான் அத் தகையான் போ ரொழிதல் தகா தென்பதை மட்டுங் கண்ண பிரான் கருதின ரல்லர்; வில் லேந்தியவனுயினும் ஐம் பொறி களையும் ஒறுத் தடக்க வல்லவ னுதலால், மற்றைய சாத னங்களு மிவன்பா லுண்டு, அவற்றை மிளிரச் செய்து தத்துவ ஞானத்தைப் புகட்டுவோம் என எண்ணின ரென் பதும் தோன்ற, "விஜயன்" என்றனர்.



உண்மை மறவன், போர்க் களத்தில் தந்தை யென வும், மைந்தன் எனவும், மாம னெனவும். ஆச்சாரிய னெனவும், அன்பு கொண்டு அவரோடு போர் செய்யா திரான் செய்யா திருப்பின், அதனை யிழுக் காக எண் ணு வான். போர் புரிதல் புகழிற்கும், சுவர்க்கம் புகுதற்கும். உயர்வினை யெய்தற்கு முரிய சிறந்த முன்னிலை யாக வெண் ணுவான். ஆதலால், அர்ச்சுனன் அவ் வா றின்றி. அதாவது, மறத்திற்கு மாறாகப் போ ரொழிந் திருக்க எண்ணியதால், அவ் வெண்ணத்தை. "வெறுப்பதா மயல்" என்றனர். அவன் போர் முகத்திற்கு வந்து அங்கு நின்ற தந்தையர் களையும், தந்தையரின் றந்தையர்களையும், மைந்தர்களையும், மாமன்மாரையும், ஆச்சார்யர்களையும், எதிரிக ளாக வந் தா லு மெப்படிக் கொல்வது என் றன்பு கொண்டு போ ரொழிய எண்ணியதா லங்ஙனங் கூறினர்.

அவன் எண்ணியதை. "அநார்ய ஜுஷ்டம். 'அஸ்வர்க் யம்,' அகீர்த்திகரம், அர்ஜுந" எனக் கூறுங் கீதைத் திரு வாய் மொழிகளா லும் இழி வாகக் கருதல் காணலாம்.

தத்துவ ஞானத்தை யடைவித்தற்கு முன்னிலை யாக இருந்தமையால், "நல் விசுவ ரூபத்தை' என நன்மை யடை யிட்டுக் கூறினர்.

வெறுப்பதா மயலினை, மெல்லவே மனதைத் தெளித்து, விசுவ ரூபத்தினைக் காட்டி நீக்கிய தகை போல, எனக் கூட்டிப் பொருள் காண்க.

யானும் விஜயனைப் போலச் சான்றோர் வெறுக்கு மாறு, யா னென தென்னும் செருக்கா மயலினி லாழா தகன் றின்பமே வடிவா யிருந் திருமாக்கும் பெற்றிய னுகச் செய்வா யாக என்றபடி.

அர்ச்சுனன் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் விரை யாது அவன் மனம் திருந்தும் வகையில் பதி லுரைத்துத்

தூய்மைப் படுத்தியதால், 'மெல்லவே மனதைத் தெளித்து' என்றனர்.

அர்ச்சுனன் தேவரீர் திரு வருளால் சாதந நான்கும் கைவரப் பெற்றவன், யா னத்தகைய னல்ல னென்பார், "எனக்கும்" என இறந்ததுதழுவிய இழிவு சிறப்பும்மை கொடுத்துக் கூறினார்.

யானும், உம்மை வழிபட நாடியதால் சாதநங்கள் நான்கு மென்பால் முற்றுப் பெறத் தோன்றச் செய்து, அர்ச்சுநனுக்குப் போல, தத்துவ மஸி மகா வாக்கியப் பொருளை யுபதேசித்துத் தத்துவ ஞாநத்தைத் தந்தருள் வீ ராக என்பது குறிப்பு. 2

சூடிக் கொடுத்த கோதை நாச்சியார் வாயி லாகப் பக்தியை உணர்த்தல்.

3. வில்லிபுத் தூரை யுடையவாண் டாளை
விருப்புடன் அழைத்துக் கொண் டதுபோல்,
தொல்லையாம் யோநி தொறும்புகுந் துழன்று
தூய்மையில் கயவனு மெனக்கும்,
நல்லையா நீநற் கருணையால் ஈவாய்
நல்லடி யென்றென்று வளமார்,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமாள்
திருவடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) வில்லி புத் தூரை யுடைய ஆண்டாளை-(ஸ்ரீ வில்லி புத்தூரைத் தனது பிறப்பிட மாகக் கொண் டவத ரித்து) அதனைத் தன திருப்பிட மாகக் கொண்ட கோதை நாச்சியாரை, விருப்புடன் அழைத்துக் கொண்டது போல்- சீரங்கந் திருக் கோயிலில் வந்து கண்டு களிக்கு மா றந் நாச்சி யாரை யழைத்துக் களித்து தம் முடன் கலந் தின்புறச் செய்தது போல, தொல்லையாம் யோநி தொறும்-துன்



பமே வடி வாகிய பிறவிகள் ஏழனுள் ஒவ் வொன்றி னுள்ளும், புகுந்து உழன்று-(மாறி மாறிப் போய்)புகுந்து அலைந்து ஆறுதல் பெறாமல், தூய்மையில் கயவனும் எனக் கும்-(மல விக்ஷேப ஆவரண மாகிய தோடங்கள் நீங்கப் பெறாமையால்) அஞ்ஞாந சிரோன்மணி யாக விளங்கு மடி யேற்கும், நல் ஐயா நீ நல் கருணையால் நல் அடி ஈவாய்- நல்ல தந்தையே தேவரீர் அறக் கருணையால் நம் முடைய பிறவிப் பிணிக்கு மருந் தாகிய திரு வடிகளில் கலக்கு மாறு அவ் வடிகளைச் சந்நிகித மாகும்படி செய்தருள்வீர், என் றென்று தினமும் - என்று சொல்லிச் சொல்லி நா டோறும், வளம் ஆர் - எல்லா வளங்களும் நிரம்பிய, தில்லை கோவிந்த ராஜப் பெருமாள்-தில்லைத் திருச் சித்திர கூடத்தில் கிடந்த திருக் கோலத்தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோவிந்த ராஜப் பெருமா ளுடைய, நல் திரு அடிகளை திநம் பணிவாம் - பிறவிப் பிணிக்கு மருந்தாகிய திரு வடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங்குவாம். (எ-று)

(வி-ரை) ஆண்டாள் என்பவர் ஸ்ரீ வில்லி புத்தூரில் திரு மாலுக்குப் பா மாலை சாத்துந் தொண்டுடன் பூ மாலைக் கட்டிச் சாத்துந் தொண்டையும் இறுகப் பிடித்து ஒழுகிய அந்தணப் பெரியா ராகிய பெரியாழ்வார் என்பவர் திரு மகளா ராக அவதரித்துப் பெருமாளிடம் தந்தை யாரைப் பார்க்கிலும் பக்திப் பரவச முடையவ ராக வாழ்ந் தவர். அந் நாச்சியார் தந்தையார் கட்டிச் சாத்தும் பூ மாலைகளைத் தான் முதலி லலங்கரித்துக் கொண்டு பின்னர் அவற்றைப் பெருமாளுக் கணியும்படி செய்து வந்தார். அதனாலே, அந் நாச்சியார் சூடிக் கொடுத்த நாச்சியார் என அழைக்கப் பெற்றார் அவர் பெருமாளைத் தந் நாயக ராகக் கொண்டமையால், அவ் வாறு செய்து வந்தார். ஆடவரும் பெண்மையை அவாவுந் தோளினா ராய புரு டோத்தமரை ஆடவர்கள் தங்களைப் பெண்க ளாகப்

பாவித்து அப் பெருமானை நாயக ராகக் கொண்டு பக்தி செய்வதைப் பார்க்கிலும், இவர் தன் னுயக ராகக் கொண்டு பக்தி செய்தது பொருத்தமும், அன்பி னழுத்தமு முடைய தாகு மாதலால், விருப்புடன் அழைத்துக் கொண்டார் என்பதைக் குறிக்க, "விருப்புட னழைத்துக் கொண்டது போல்" என்றனர். இந் நாச்சியார் திரு மாதி னம்ச மெனக் கருதுதலால், அவதரித்து என வுரை வுரைக்கப் பட்டது.

ஈன்ற தந்தை ஒரோ வழி இரணியன் போலத் துன் புறுத்துஞ் செயல்களைச் செய்யினுஞ் செய்வர். இறைவ ஞகிய தந்தை என்றும், (போற்றும் போதும் தண்டிக்கும் போதும்) நன்மைக்குக் காரணமான செயல்களையே செய்வ ராதலால், "நல் லையா" என்றனர். அறக் கருணையாலும், மறக் கருணையாலும், இன் புறுத்தியும். துன் புறுத்தியு மடியவரை யாளக் கருதுந் தேவரீர், துன்பச் செயல் வாயி லாக என்னைத் திருத்தல் வேண்டாம், அறக் கருணை யால் இன்பச் செயல் வாயிலாக என்னைத் திருத்துக என்று வேண்டுவார், "நற் கருணையால்" என்றனர் நற் கருணை- அறக் கருணை.

'அடி' யென்பது மேற் போக் காகத் திருப் பாதத் தைக் குறிப்பிடினும், அது உலகத்திற் கெல்லாங் காரண மாயும் காரணுதீதமா யிலகும் சச்சிதாநந்த சொரூப மாகிய முதற் பொருளையே உணர்த்துவ தாக முடியும் என்றலே பொருந்தும். அவ் வாறுணர்த்தும் போது, 'நின தடி' என்பது, தேவரீரின் உண்மைச் சொரூப மாகிய பிரத்திய கபிந்ந பிரம சொரூபத்தை (சச்சிதாநந்த சொரூபத்தை) எனப் பொருள் கொள்ள நிகழும். 'ஈவாய்' என்பதும் அப் பிரம சொருபமே யா னென் றுணர்ந் தாறியிருக்குந் தன்மையை யெற் களித்தருள் வாயாக என்னும் பொரு ளைத் தரும்.





கோகுலக் கோபிகள் வாயி லாகப்

பக்தியை உணர்த்தல்.

4. எல்லையில் கோப வதுக்களா நினதே
ரின்பரு பத்தினை யடைய,
நல்லதாங் கோகு லத்தினில் விரும்பி
நற்றவ முடையவர் பிறக்க,
இல்லையென் னுமல் அருளினை யெனக்கும்
இன்றருள் செய்தியென் றன்பால்,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமாள்
திருவடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) நற் றவ முடையவர் விரும்பி-நல்ல தவ முடைய முனிவரர்கள் (ராமாவதாரத்தில் தேவ ரீருடைய திரு மேனி யழகைக் கண்) டாசை கொண்டமையால், எல்லையில் கோப வதுக்களா(க)-அள வில்லாத ஆயர் மங் கையர்க ளாக, நினது ஏர் இன்ப ரூபத்தினை அடைய- (கிருஷ்ணுவதாரத்தில்) தேவரீ ருடைய அழகிய இன்ப வடிவினைத் தழுவி யின்புற, நல்லதாங் கோ குலத்தினில் பிறக்க-சிறந்த கோகுலத்திலே வந்து பிறக்கவும், இல்லை என்னுமல் அருளினை-அவர்கட்கு வேண்டிய போக மனைத் தினையும், கிடைக்க வில்லையே என்று வருந்தாதபடி கொடுத்தருளினீர், எனக்கும் இன்று அருள்-(அது போல்) அடியேற்கும் இப்போ தருள்புரிவீராக, என்று அன்பால்- என்று கேட்டு அன்போடு, நல் தில்லை கோவிந்த ராஜ பெருமாள்-தில்லைத் திருச் சித்திர கூடத்தில் திடந்த திருக் கோலத்தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோவிந்த ராஜப் பெருமா னுடைய, திரு அடிகளை திநம் பணிவாம்-பிறவிப் பிணிக்கு மருந் தாகிய திரு வடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங்குவாம். (எ-று)

(வி-ரை) இராமாவதாரத்தில் தவ முடைய முனிவர்கள் தேவரீ ருடைய திருமேனி யழகைக் கண்டு அதனைத் தழுவ ஆசைப் பட்டமையால் கிருஷ்ணுவதாரத்தில், அவர்கள் கோபிகளாகப் பிறந்து, எவ் வெவ் வாறு அணைந்தின்புற விரும்பினுர்களோ, அவ் வவ் வா றெலா மணைந்தின்புறச் செய்தது போல, யானும் நும்மைச் சச்சிதாநந்த சொரூப ராகக் கண்டு, என்னையும் நும்மைவிட வே றலன் என் றுணர்ந்து, இன்ன லற் றின்புரு வாக இருக்க விரும்பினன், அவ் வாறிருக்க வருள் புரிவீராக எனத் தில்லைக் கோவிந்த ராஜப் பெருமாள் திரு வடிகளை யிடைவிடாது பணிகுவாம் என்பது கருத்து.

'நற் றவம்' என்பது, துறவினை யுணர்த்திப் பின் உள்ளத் துறவினுக் குரிய தாகி, அத் துறவுக ளிரண்டனையும் ஒன் றனையு முடைய முனிவர்கள் எனக் குறித்து நின்ற தென்க.

'நற் றவம்' என்பது துறவினை யுணர்த்தலை, ''நற்றவஞ் செய்வார்க் கிடந் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்'' என்னும் சீவக சிந்தாமணி பாக்கள் முதலியவற்ரு லறியலாமென்க.

இனி, ''பெண்ணி னேக்குஞ் சுவையிற் பிறர்பிறர்க்,
கெண்ணி நோக்கி யியம்பரு மின்பத்தைப்,
பண்ணி னேக்கும் பராவமு தைப்பசுங்.
கண்ணி னேக்கின ருள்ளங்களி''த்தற் கேது வாகிய தவ முடைய ராக முனிவர்கள் விளங்கியதால், ''நற் றவ முடையவர்'' என முனிவர்கள் விசேடிக்கப்பட்டன ரெனினு மாம்.

இம்மையில் உடலி லெழும் நோ யகற்றி வளர்ப்பனவும், மறுமையில் சுவர்க்க முதலியவற்றை யடைந் தின்பந் துய்க்க வளர்க்கும் வேள்வி முதலியவற்றிற்கு நல் லுறுப்பாவனவும், இறைவன் திருக் கோயில் முதலியவற்றைத் தூய்மைப் படுத்துவனவும், அச் செயலால் முத்திக்குப் பரம்பரா சாதந மாக இருப்பனவு மாய பஞ்ச கவ்வியங்களை யளிக்கும் ஆ னிரைகளைக் காப்ப தாதலின், 'கோகுலம்', 'நல்ல தாங் கோகுலம்' என விசேடிக்கப்பட்டதென்க.



'வதுக்க ளாக' என் றிருக்க வேண்டியது தொகுத்தல் விகாரத்தால் 'வதுக்களா' என நின்றது.

'எல்லையில் கோப வதுக்கள்' என்பது, ''ஆயர் குல மாத ரளவிலோ ரைப்புணர்ந்தும்'' (கீதா சாரத் தாலாட்டு) 4 என்பது முதலியவற்றை ஞாபிக்கின்றது.

மகாபலிச் சக்ரவர்த்தி வாயி லாகப்
பக்தியை உணர்த்தல்.

5. மல்லல்மா வலிபோல் விளக்கினைத் தூண்டி
மாண்புடை வைகுந்த மதனைச்.
செல்லவே விரும்பி வந்தன னடியேன்
சேருமா றெனக்குநீ யருள்என்,
றல்லியங் கோதை மாதர்கால் வருட
அறிதுயில் புரியுநல் வளமார்,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமாள்
திருவடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) மல்லல் மாவலி போல்-(கொடை வளப்பம் பொருந்திய) மகா பலி சக்கர வர்த்தியானவர் முன் பிறப்பில் எலி யாக இருந்து தேவரீர் திருக் கோயிலில் விளக்கினை மிளரு மாறு செய்தமையால் மறு பிறப்பில் சக்கரவர்த்தியாம்படி பிறந்து நும் திரு வடியைத் தலைமேற் சூட்டப்பெற்று வைகுந்தத்தை யடைந்தது போல். விளக்கினைத் தூண்டி-(தத்துவ ஞாந மாகிய) விளக்கை(அிடப்படாமல் திடப்பட) மிளிர்வித்து, மாண்புடை வைகுந்தமதனை செல்ல-என் று நின் று நிலவுவதால் மாட்சிமை தங்கிய நும்

மெய்ச் சொருபத்தினைப் பிரத்தியக் காகிய என்னிற் பிந்ந மில்லை யென் றடைந் திருமாப்புற் றிருக்க. அடியேன் விரும்பி வந்தனன்-(நும் பழ) வடியேன் விருப்டங்கொண்டு நும் பக்கல் வந்தேன், எனக்குச் சேரும் ஆறு அருள் என்று-(அவ் விருப்பம் மந்த மாக இருத்தலால்) அவ் வாறு வந்த எனக்கு (அப் பிந்ந மில்லா நிலையினை யடைவதற் குரிய தீவிர முமுட்சுத்துவமும், அது கைகூடும் வழி யாகிய மற்றை சாதந வாயில்களு மாகிய) நல் வழியைப் பெறும் படி முன்ன ரருள்வீ ராக என்று கேட்டு, அல்லி யங் கோதை மாதர் கால் வருட-அக விதழ்களோடு கூடிய பூக்களாற் றெடுத்த மாலைகளை யணிந்த திரு மகளும் நில மகளும் திரு வடிகளைத் தடவ, அறி துயில் புரியும்-திருக் கண் வளர்ந் தருள்கின்ற, நல் வள மார்-நல்ல வள நிறைந்த, நல் தில்லைக் கோவிந்த ராஜப் பெருமாள்-தில்லைத் திருச் சித்திர கூடத்தில் கிடந்த திருக் கோலத்தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோவிந்த ராஜப் பெருமா னுடைய, திரு வடிகளைத் திநம் பணிவாம்-(பிறவிப் பிணிக்கு மருந் தாகிய) திரு வடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங்குவாம்.

(எ-று)

(வி-ரை) மாவலி தன் குல குரு வாகிய சுக்கிர பகவான், மூன் றடி மண் வேண்டி வந்தவன் சிறு வடிவினனாகிய பிராமணன் றானே என் றெண்ணாதே, இவன் 'மாயன்' என்று சொல்லித் தடுத்தும் ஒப்பாது, "கொடுப்பது விலக்கு கொடியோய், உனது சுற்ற, முடுப்பதுவு முண்பதுவு மின்றிவிடு கின்றாய்", "வெள்ளியை யாதலின் விளம்பினை" (கம்பர்) என்பன போலச் சொல்லி இகழ்ந்து, வள்ளியோர் உள்ளி யுள்ள வெல்லா முவந்து கொடுக்கு மியல்பின ராதலின், உடம்பினைக் கேட்கினும் கொடுப்பர் என ("என்பு முரியர் பிறர்க்கு") (72) வள்ளுவர் முதலிய சான்றோர் கூறும் உரைப்படி 'கொடுப்பேன்' என்ற மூன் றடி மண்ணைக் கொடுக்க ஒருப்பட்டமையால், "மல்லல் மாவலி" என்றனர். "இரப்பாரை யில்லாத ஈர்ங்கண்மா ஞாலம், மரப்பாவை சென்றுவந் தற்று" (1058 குறள்) என்றபடி வழங்காத வளம், வள மெனப் பயன்படா மையால். வள்ளியோர் வளம் அத்தகைய பயன்படலால், வள மெனப்படும். அதனை யுடையாரும் வள முடையா ரெனப்படுவார் என்பதைக் குறிக்க, "மல்லல் மாவலி" என்று ரெனினு மாம்.

வைகுண்ட மென்பது, வைகுந்த மெனத் திரிந்த தற்பவம். அஃ தழியாத தென்னும் பொருட்டாதலின், என்று நின்று நிலவுவ தாகிய (சச்சிதாநந்த மாகிய) நும் மெய்ச் சொருப மென வுரை வுரைக்கப்பட்டது. மாயையும், மாயா காரிய மாகிய வுலகமும், பிரமத்தில் விவர்த்த மாதலின். நிலை யுடையன வல்ல வாகு மாதலால், வைகுந்த மென்பதற்குப் பிரத்திய கபிந்ந பிரமமே பொருளாகு மென்க.

'செல்ல' என்பது, 'அடைய' என்னும் பொருட்டாக நின்றது. அக விதழும் புற விதழு முடைய மலர்கள் மண மிகப் பெறுதலால், "அல்லியங் கோதை" என்றனர்; மண மிக்க மலர்களா லாகிய மாலைகளை அவர் சூடி யிருத்தலி னென்க. 5

நாரதமுநி சரித வாயி லாகப் பக்தியை உணர்த்தல்.

6. சொல்லொடு காநந் துதைவுறப் பாடும்
சுத்தனும் நாரத முநியை,
மெல்லிய நீரில் முழுகுறச் செய்து
மேன்மைகொள் பெண்ணுரு வாக்கி,
அல்லலில் லாமல் ஆணுரு வாக்கு
மையனே துய்யனுக் கெனவே.
தில்லைகோ விந்த ராஜநற் பெருமாள்
திருவடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) சொல்லொடு கானந் துதைவுறப் பாடும்-பாட்டோ டிசை யொன்றுபட் டிசைக்க இசை பாட வல்ல, சுத்த னும் நாரத முனியை-தூய நெஞ்சுடன் கூடிய நாரத முனிவரை, மெல் இயல் நீரில் முழுகுறச் செய்து-மென்மை யான தண்ணீரில் முழுகும்படி செய்து, மேன்மைகொள் பெண் உரு ஆக்கி-(முழுகி யெழும் பொழுது) அழகு படைத்த பெண் ணுருவம் பெற்று வரச் செய்து, அல்லல் இல்லாமல்-(பின்னர்ப் பெண் ணுருவத்தை யடைந் ததால் வருந்தும் வருத்த நீங்கு மாறு, ஆண் உரு ஆக்கும்-மீண்டும் ஆண் வடிவத்தைப் பெறச் செய்த, ஐயனே-தலைவனே, துய்யன் ஆக்கு எனவே-(அவித்தியா வுபாதி யினுல் சீவ னென வேறுபட்டு நின்று மயங்கும் என்னையும் உபாதியால் வரு பேதமே யன்றி சொருபத்திற் பேத மில்லை யாதலால், சச்சிதாநந்த பிரமமே யா னென்று) தெளி யும்படி செய்வா யென்று, நல் தில்லை கோவிந்த ராஜப் பெருமாள்-தில்லைத் திருச் சித்திர கூடத்தில் கிடந்த திருக் கோலத்தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோவிந்த ராஜப் பெருமா னுடைய, திரு அடிகளை திநம் பணிவாம்-(பிறவிப் பிணிக்கு மருந் தாகிய)திரு வடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங் குவாம் (எ-று)

(வி-ரை) "பருந்தொடு நிழல்சென் றன்ன வியலி சைப் பயன்றுய்ப் பாரும்". (கம்பர்) என்ப ராதலால், "சொல்லொடு கானந் துதை வுறப் பாடும்" என்றனர். சொல் ஆகு பெய ராய் பாட்டை யுணர்த்திற்று. இசை பாட வல்லவர் காமத்தி லாழ்வார், நாரத ரங்ஙன மின்றி மீண்டவர் என்பார், "சுத்தனும் நாரத முநி" என்றனர் என்க. இசை காமம் விளைக்கு மென்பதும், அங்ஙன மாயி னும், சீவகன் நிவிர்த்தி வழியில் புக்கான் என்பதுந் தோன்ற திருத் தக்க தேவர், "வீணைக் கிழவன் விருந்தார் கதி சென்ற வாறும்" என்றனர். இக் கருத்தினை நச்சி னர்க் கினிய ருரை தெளிவித்தல் காண்க.



செய்யு ளாதலால், "மெல்லியல நீ ரென்பது" இனஞ் சுட்டாத பண்பு கொள் பெய ராக நின்றது. நின்ற தேனும், தன்மை யணி குறித்து நிற்றலால் வழுவா கா தென்க.

இனி, "பத்தர சங்கர கஷாநி கடுநி ஜலாநி" (சாகுந் தலம்) என்றபடி, சருகு முதலியவற்றின் சேர்க்கையால் அழுக்கு நிறைந்து தடிப் பாக இருக்கும் நீ ரன்று, தூய நீர் எனக் குறிப்பதால், இனஞ் சுட்டிய பண்பு கொள் பெயரே யாகும் எனினு மமையும். தூய்மை-உபாதி யற்ற நிலை. 6

நடநக் காட்சி கண்டு கண் துயிலும் வாயி லாக
சிவ விஷ்ணு பக்தியினை உணர்த்தல்.

7. எல்லொளி ததும்பக் கநகவம் பலத்தில்
எழிற்சடை விரித்துநின ருட,
வல்லமைத் துனர்தம் மகிழ்நடங் காண
வைகுந்த மொருவிவந் தடைந்து,
அல்லொடு பகலா வணைந்துகாண் சோர்வால்
அயர்ந்தனன் எனத்துயில் புரியும்,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமாள்
திருவடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) எல் ஒளி ததும்ப-இள வெள ஞாயிற்றின் ஒளி போலத் திரு மேனியின் செவ் வொளி எங்கும் புடைபரந்து வழிதர, கநக அம்பலத்தில்-பொன் னம் பலத்திலே, எழில் சடை விரித்து நின்று-(முன்னர் முனி வரர்கள் காண) அழகிய சடைகள் விரிந்தாடும்படி செய்து, ஆட வல்ல மைத்துனர் தம்-ஆநந்தத் தாண்டவஞ் செய்ய வல்லவ ராகிய மைத்துன ரான சிவ பெருமா னுடைய, மகிழ் நடம் காண-(அப் பதஞ்சலி வியாக்கிர பாத முநி வர்கள் வேண்டுகோட் கிணங்கி என்று மாடுகின்ற,

பிறப்பு வீடு என்பவற் றின்பங்க ளெல்லாந் தர வல்லதாத லின்) ஏவருங் கண்டு களிக்கும் படியான நடநத்தைக் காண்பதற்கு, வைகுந்தம் ஒருவி வந்து அடைந்து - இன்ப வடிவ மான வைகுந்தத்தை நீங்கி வந்து சேர்ந்து, அல் லொடு பக லாக அணைந்து - இரவு பக லாக நெருங்கி நின்று, காண் சோர்வால்-விழித்திருந்து கண்டு களிப்பதனு லேற்பட்ட அயர்ச்சியினுல், அயர்ந்தனன் என-தூங்குகின் ருன் என்று கருதும்படி, துயில் புரியும்-அறிதுயில் செய் கின்ற, நல் தில்லைக் கோவிந்த ராஜப் பெருமாள்-தில்லைத் திருச் சித்திர கூடத்தில் கிடந்த திருக் கோலத்தோடு என் றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோவிந்த ராஜப் பெருமா ளுடைய, திரு அடிகளைத் திநம் பணிவாம் - (பிறவிப் பிணிக்கு மருந் தாகிய) திரு வடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங்குவாம். (எ-று)

(வி-ரை) எல்-ஞாயிறு. சிவ பெருமான் திரு மேனி செந் நிற முடைய தாதலால், 'எல் லொளி ததும்ப' என்ற னர். ஒரு காலைத் தூக்கி, ஒரு காலை யூன்றி, என்று மிடை விடா தாடுதல், எவர்க்கு மியலா தாதலால், 'ஆட வல்ல' என்றனர். இவ் வாட்டம் பஞ்சகிருத்தியத்தையும் குறிப் பதாதலால் பாலந மொன்றே யுடைய தன்னை நோக்க, ஐந்து தொழிலையு மியற்றுதல் வன்மைப் பாடுடையதாத லால், "ஆட வல்ல மைத்துனர்' எனக் கருதினர் திரு மால் என்பா ராய், அங்ஙனங் கூறினு ரெனினு மாம்,

"தோற்றந் துடியதினில் தோன்றுந் திதி சுமைப்பில்"
என வரும் உண்மை விளக்க முதலியவற்ருல் ஐந் தொழி லியற்றுதலை நடநத்திற் காட்டுகின்ருன் சிவ பெருமான் என்பது புலப்படும்.

இப் பாவில், 'அயர்ந்தனன் என' எனக் குறிக் குறிப் பதால் தோன்று, முத்பிரேக்ஷ யலங்காரம் (தற் குறிப்



பேற்ற வணி)படிப்பா ருள்ளத்தைக் கவரா திராது என்பதி லைய மில்லை. நாரதர் பெண் ணுரு வெய்திய கதையும், ஆண் உரு வாகிய கதையும், பாகவதத்தி லுள் ளது அங்குக் காண்க. 7

கோவர்த்தந கிரியால் மழையைக் காத்தல் வாயி லாக ஆயர் பக்தி மூலம் பக்தியை உணர்த்தல்.

8. புல்லவான் மேய்க்கு மாயர்கள் பொங்கல்
பொலிவுரு தழிந்திட மழையை,
வல்லவிந் திரன்ருன் ஏவிட வன்று
மலையினுல் காத்தல்போ லெனையும்,
அல்லலை நீக்கிக் காப்பதுன் கடமை
யையவாந் தோளினுய் என்றே,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமான்
திருவடி களைத்திநம் பணிவாம்.

ஐய வாம் தோளினுய்-அழகிய வாகிய திருத் தோள் களை யுடையவனே, புல்ல ஆன் - ஏறுகளுடன் கூடிய பசு நிரைகளை, மேய்க்கும் ஆயர்கள் - மேயும்படி செய் கின்ற இடையர்கள் (தன்னைக் குறித்துச் செய்த), பொங் கல்-பொங்க (லிட்டுச் செய்யும் விழா வானது) பொலி வுருது அழிந்திட - சிறப்புருமல் அழியும்படி, மழையை- மேகங்களை, வல்ல இந்திரன் தான்-ஆற்றல் மிக்க இந்திர னைவன், ஏவிட - (நீர் பொழிந்து அழியுங்க ளெனச்) செலுத்த (வந் தழிக்கும் போது), மலையினுல்-கோவர்த்தந கிரியினுல் (கோவர்த்தந கிரியைக் குடையாகப் பிடித்த லால்), காத்தல் போல்- (இடையர்களையும் பசுக் கூட்டங் களையும் பொங்கல் விழாவையும் மழையாற் கெடாதபடி) காத்தலைப் போல, எனையும் - (யான் என தென்னுஞ் செருக்கினுல் ஏவப்படும் காம வெகுளிகள் வந்து, யான் கொண்ட நித்தியாநித்திய விவேக முதலியவற்றை யழிக்கப்

பிறவித் துன்பங்களின் மீண்டு மழுந்த நிற்கும்) அடியேனை யும், அல்லலை நீக்கி-(காம வெகுளிகள் சாதநங்களை யழித் தலால் பிறவித் துன்பங்களி லாழாதபடி) அக் காம வெகுளிகளை நீக்கி, காப்பது - (யா னென தென்னுஞ் செருக் ககல, அகம் பிரமாஸ்மி யென் றுறியிருக்க மேற் கொள்ளும் சாதநங்கள் அழியாது முற்றுப் பெற்று நிலைக்க)க் காத்தல், உன் கடமை என-(யாங்கள்) பரமாச் சாரிய னுகக் கொண்ட தேவரீர் கடமை யர்கும் என்று சொல்லி, நல் தில்லை கோவிந்த ராஜப் பெருமாள்-தில்லைத் திருச் சித்திர கூடத்தில் கிடந்த திருக் கோலத்தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளு கின்ற கோவிந்த ராஜப் பெருமா ளுடைய, திரு அடிகளை திநம் பணிவாம்-(பிறவிப் பிணிக்கு மருந் தாகிய) திரு வடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங்குவாம். (எ-று)

(வி-ரை) புல்லம்-எருது. ஐ-அழகு. தான் என்பது கட்டுரைச் சுவைபட நின்றது. எண்ணிய வெண்ணியாங் குச் செய்து முடிக்குந் தன்மை பெற்றமையால், "வல்ல விந்திரன்" என்றனர். அத் தகையான் செயலும் இளங் கண்ணன்பால் சென்றிலது என்பார் அங்ஙனங் கூறினர். அன்பர்கள் துன் பகற்றுந் தன்மையன வாகத் தோள்க ளிருத்தலின், "ஐய வாம் தோள்கள்" எனப் பட்டன. வெறு மழகு மட்டும் வாய்ந்தன வென்பதற் கங்ஙனம் கூறினு ரல்லர் என்க.

திருமால், அத்வைதிகளுக்குப் பரமாச்சாரிய னுதலால், 'உன் கடமை' என்பதற்கு, 'பரமாச்சாரிய னுன தேவரீர் கடமை' எனப் பொருள் உரைக்கப்பட்டது.

திரு மால் பரமாச்சாரிய னென்பது, அடியில் வரும் பா முதலியவற்று லறியலா மென்க.



## புண்டரீகனது பக்தி வாயிலாகப் பக்தியினை உணர்த்தல்.

9. நில்லென வில்லிற் பண்டரி புரத்தில்
 விட்டல நாதராய் நிற்க,
மெல்லியல் மனைவி தன்னெடு மிடைந்து
 விருப்புடன் தந்தைதா யவரைச்,
சொல்லினுல் சேவித் தன்னுல கடைந்தார்
 துரிசினேற் கருளுதி யென்றே,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமாள்
 திருவடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) நில் என - (தாய் தந்தையர்களை யன்புடன் பணி செய்து வழிபடுதலிற் றவருத புண்டரீகனது பணியை மகிழ்ந் தருள்புரிய அவனது பின்புற மாக வந்து நின்ற கண்ண பிரானை அப் பெருமானது நீலத் திரு மேனி யொளி கண்ணிற்குப் புலப்படத் திரும்பிப் பார்த்துத் தந்தை தாயர் களின் பணி முடிந்த பிறகு வணங்குவோ மென்னுங் குறிப்புடன் அங்கு இந்திரனது சாப வடிவ மாய்க் கிடந்த செங் கல்லை யெடுத் திட்டு இதன் மேல்) நிற்பீராக வென்று (அவன்) வேண்ட, பண்டரி புரத்தில் - (புண்டரீக புரம் என அவன் பெயரா லேற்பட்டுப் பின் பண்டரி புரம் என மருவிய) அந் நகரத்தில், இல்லில் - (அப் புண்டரீகனது) வீட்டில், விட்டல நாதராய் நிற்க - (காட்சி கொடுக்க வந்த கண்ண பிரான், அவன் வேண்டுகோட் கிணங்கி யென் றும்) விட்டல நாதர் என்று சொல்லும்படி அச் செங்கல் மேல் நின்ற திருக் கோலத்துடன் கூடியவ ராய் நின்று காட்சி யளித் தருளும்படி, மேல் இயல் மனைவி தன்னேடு மிடைந்து-மென்மை யான தன்மையை யுடைய மனையா ளுடன் பிரிந்து கூடி, விருப்புடன்-அன்புடன், தந்தை தா யவரை-தந்தையும் தாயு மாகிய அக் கண் கண்ட தெய்வங் களை, சொல்லினுல் - குக்குட முநிவ ராசிரமத்தை விட்டு வெளி வந்த யமுனை சரஸ்வதியோடு கூடியகங்கா நதி யாகிய

தேவியின்) திரு வாக்கின்படி, சேவித்து-மெய் வா யிவை களாற் செய்ய வேண்டிய பணிகளைச் செய்து வழிபட்டு, உன் னுல கடைந்தான்-அப் புண்டரீகன் அச் சேவையின் பய னுக இம்மையிற் றேவரீரைக் கண்ணுரைக் கண்டதோ டமையாது எல்லாருக்குங் காட்சி கொடுத் தருளும்படி யுஞ் செய்து முடிவில் பரம பதத்தில் நித்திய சூரிகளுடன் கலந்து தேவரீரது திரு மேனி யழகி லீடுப ட்டின்புற்றுப் பின்னர் சச்சிதாநந்த வடிவ மாகத் திகழு நிலையையும் அடையாதான் போ லடைந்தான், துரிசினேற்கும் - மும் மலங்களும் நீங்கப் பெறுத அடியேனுக்கும், அருளுதி என்று-(மந்த மாக வழிபடினு மது வழியாகத் தேவரீர் திரு வருட் டிறன் வெளிப்படும்படி திரு வுளம்பற்றி) அருள் செய்து அந் நிலையை யடை - யச் செய்வா யென்று விண்ணப் பித்துக் கொண்டு, தில்லைக் கோவிந்த ராஜ நல் பெருமாள்-தில்லைத் திருச் சித்திர கூடத்தில் கிடந்த திருக் கோலத் தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோர்விந்த ராஜப் பெருமா ளுடைய, திரு அடிகளைத் திநம் பணிவாம்-(பிறவிப் பிணிக்கு மருந் தாகிய) திரு வடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங்குவாம். (எ-று)

(வி-ரை) கண் கண்ட தெய்வங்க ளாகிய தாய் தந்தையருக்குச் செய்யும் பணியை விரும்பி அருள் செய்ய வெளி வந்த தெய்வ மாதலால், அப் பணி தவறின் செல்லி னும் சென்றுவிடும், அப் பணி தவருது செய்வதற்கு நில் எனக் கூறின் நின்றுவிடும், என்னு மெண்ணத்தால் நிற்கச் செய்தான் என்பார், "நில் என" என்றனர்.

அன்பர்கள் தங்கு மிடம் மா சகன்று வருவா ருள மாசும் போக்க வல்ல தாகலின், "அகம்" முதலிய சொற் களாற் கூருது, "இல்" என அதன் திறம் விளங்கக் கூறினர்

கண்டு கேட் டுண் டுயிர்த் துற் றறியும் ஐம் புல மென்மையோடு அன்பினு லுள்ளத்தின் மென்மையு



முடைய ளாதலின், இருமை யின்பிற்கும் இறுதியி லன்பிற் குரிய துணை யாகிய மனைவி யென்பார், "மெல் லியல் மனைவி" என்றனர். அம் மனைவிபா லன்புடைய னுய் அவளுடன் கூடி யென்பார், "மனைவி தன்னெடு மிடைந்து" என்றனர். அவள்மாட் டன்பில் வழி செய்யும் எவ் வறமுங் கடைபோகா தாகலின், அவ் வா றவ னிருந் தமையைத் தெரிவித்தனர்.

இக் கருத்து,

"அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை,
பண்பும் பயனு.மது" (5 இல் வாழ்க்கை. 5)

என்னும் வள்ளுவர் பாவாலும் வெளிப்படுதல் காண்க. மனைவியுங் கொழுநனு மிவ் வாறு இருந்தாற் ருன் அறத்திற் றலை சிறந்து இருமை யின்புட னிறுதியி லின்பையு மெய் தலா மெனப் பொது வாகப் பெறப்படும்படியும், "மெல் லியல் மனைவி தன்னெடு மிடைந்து" என்று கூறியது போற்றத் தகுந்த தொன் ருகும்.

தாய் தந்தையர்களில், தந்தை ஆண்டால் முதிர்ந்தவ ராக இருப்ப ராதலால், அவரைத் தாயினும் பெரிதும் பேணல் வேண்டு மென்பார். "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற முறைப்படி தாயை முற் கூருது. "தந்தை தாய்ப் பேண்" என்ற முறைப்படி, "தந்தை தா யவரை" எனத் தந்தையை முற் கூறினர்.

"அன்னையும் பிதாவும் முன் னறி தெய்வம்", "தந்தை தாய்ப் பேண்", "தந்தைசொல் மிக்க மந்திர மில்லை", "தாய் சொற் சிறந்த வாசக மில்லை", "ஈன்ரு ளின் என்ன கடவுளு மில்" என்பன போன்ற நறுந் தொடர்களை யெடுத்துக் கூறிய கங்கா தேவியின் அருள் மொழியால் முன்ன ரடித்துத் துரத்திய தாய் தந்தையரைத் தேடி யடைந் தழைத்து, அவர் உள்ள மகிழும்படி மனைவி

யோடு கூடிப் பணி செய்தமையால், "சொல்லினுல் சேவித்து" என்றனர்.

'துரிசினேற்கும்' என்பதன்கண் ணுள்ள இழிவு சிறப் பும்மை விகாரத்தாற் றொக்கது.

மனத்துக்கண் மாசிலனுய் சொல்லாலும் செயலாலுஞ் செய்யும் பணியே சிறக்கு மென்பதைக் குறிக்க, "விருப் புடன்......சேவித்து" என்றனர் என்க.

இவ் வாறே மனத்தொடுபடாத சொல்லுஞ் செயலும் பயன்படா என்பா ராய் வள்ளுவனுரும், "மனத்துக்கண் மாசில ஞதல் அனைத்தறன், ஆகுல நீரபிற" (4-4) "மனத்தொடு வாய்மை மொழியின்" (30-5) எனப் பல விடங்களிற் கூறியும், குறிப்பித்துஞ், செல்லுதல் காண்க.

இறைவனே தாய் தந்தைய ராக அமைகின்ருர் என்பது, " அம்மையே அப்பா " எனவும், " அப்பனுநீ அன்னையுநீ " எனவும் வரும் மெய்மைச் சான்ருேர் திரு வாக்கு முதலியவற்ரு லுறுதிப்படு மென்க. 9

கஜ இந்திரன், வில்வ மங்களர், பக்தி வாயி லாகப் பக்தியினை உணர்த்தல்.

10. அல்லலை யுற்ற யானையை யருளால்
அறமிலா முதலையிற் காத்தாய்,
தொல்லைகொள் வில்வ மங்களற் காகத்
தொங்கினை பாம்புதாம் பாக,
எல்லையில் சீவர் தமைப்புரப் பாய்நீ
யென்னையுங் காத்தரு ளெனவே,
தில்லைக்கோ விந்த ராஜநற் பெருமாள்
திருவடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) அல்லலை யுற்ற யானையை - (சாபத்தால் பூவுலகில் வந்து காடு மலைகளிற் றிரிந்தது மன்றி, மடுவி



லிறங்கிய பொழுது முதலையாலும் பிடிக்கப்பட்டு) துன் புற்று ஆதி மூலமே யென் றழைத்த கஜேந்திரன் என்னும் யானையை, அருளால் - ( புகழ்தலா லன்றித் ) திரு வருள் முன்னிலை யாக, அற மிலா முதலையின் - பாபத்தால் சாப மெய்திக் கொண்டது விடா முதலை யாகப் பிறந்த அச் செந்துவினின்றும் ( தப்பித் துய்யும்படி ), காத்தாய் - (சக் கரப்படையை ஏவி அம் முதலையை யறுத்தலால்) காத்தனை, தொல்லை கொள் - ( தாசிபால் வைத்த ) காமத்தாற் றுன் புற்ற, வில்வ மங்களற் காக-வில்வ மங்களன் என்னு ( மன் பனைக் காப்பதற்) காக, பாம்பு தாம்பு ஆக - (வீட்டினுள் சுவர் வழி யாக இறங்குவதற்குப் பற்றுக்கோடாகப்) பாம் பாகிய கயி ருக, தொங்கினை - தொங்கிக் காத்தருளினீர், எல்லையில் சீவர் தமைப் புரப்பாய் - இன்னு மெல்லையற்ற சீவர்கள் பலரையு மிப்படியே காப்பவ னுகின்ருய், நீ-(அத் தகைய) தேவரீர், என்னையும்-(அன்பு இல்லாத) என்னையும், கார்த் தருள்புரிவாய்-"(தீ வினைகளி னின்று நீங்கும்படி கா" வென்று சொல்லுத லாகிய ஒரு செயலைக் கொண்டு நின் திரு வருள் சிறப்பதற் காகக் ) காப்பீராக, நல் தில்லை கோவிந்த ராஜப் பெருமாள் - தில்லைத் திருச் சித்திர கூடத் தில் கிடந்த திருக் கோலத்தோடு என்றும் எப் பொழுதும் வருவார்க்குக் காட்சி தந்தருளுகின்ற கோவிந்த ராஜப் பெருமா ளுடைய, திரு அடிகளைத் திநம் பணிவாம் - (பிற விப் பிணிக்கு மருந் தாகிய) திரு வடித் தாமரை மலர்களை நாள் தோறும் வணங்குவாம். (எ-று)

(வி-ரை) வில்வ மங்களர் வரலாறு பாகவதத்தி லுள்ளது. ஆண்டு நோக்கிற் புலப்படும். இங்கு "எல்லையில் சீவர்" என்றது, அன்புகொண் டடியவ ராகிய சீவர்களை யுணர்த்திற்று. எல்லாச் சீவர்களையும் காப்பவன் என்பது வெளிப்படையாதலி னப் பொருள்பட இங்கு நின்றிலது, அப் பொருள்படக் கூறின் விசேட மிலதாகு மாதலின் என்க.

இறைவனிடம் அன்புடையவர்கள் எத் தன்மை யுடையவ ராயினும்,அவன் அத் தன்மைகளினின் றுமவரை மாற்றி யருள்புரிவா னென்பார் வில்வ மங்களர் வர லாற் றைக் குறிப்பித்து, "பாதியா யழுகிய கால்கைய ரேனும் பழிதொழிலு மிழிதொழிலும் படைத்தா ரேனும், ஆதியா யரவணையா யென்பா ராகி லவரன்றே நாம்வணங்கு மடி களாமே." (பிள்ளைப் பெருமா ளையங்கார்) என்பது முதலிய சான்றோர் மூதுரைகளையும் நினைப்பித்தன ரென்க.

இப் பத்துப் பாவிலும் இறைவனை நோக்கி நரர் சுரர் விலங்குப் பிறப் பெய்திய எல்லாருக்கும் வேற்றுமை யின்றி யருள் புரிந்தீர், எனக்கும் அருளுதல் என்பதற் கேற்ப "வீடு பெறு மா றருளுக" எனவே தெரிவித்து, அதுவே யுறுதி யென்ப தாகும். மற்றைய வுறுதிக ளெல்லா முறுதிக ளாகா என நோக்குவார்க்குக் குறிப்பித்து, அதுவே வேண் 10
டத் தக்கது எனவும் குறிப்பித்தன ரென்க.

திருப் பூ வணம், வேதாந்த மடம், ஸ்ரீ காசிகாநந்த
ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றிய தில்லைக்
கோவிந்த ராஜப் பெருமாள் தோத்திரமும்,
சிதம்பரம், கோ - சித - மடம், ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக
சுவாமிக ளவர்கள் மாணுக்கர், மதுரைத் தமிழ்ச் சங்கத்து
பண்டித, திரு வை யாறு, அறு பத்து மூவர்
மடாதிபதி, ஸ்ரீ நாராயண சுவாமிகள் இயற்றிய
நுந்தா வொளி (நித்திய பிரகாச) என்னும்
உரையும் முற்றுப் பெற்றது. சுபம்.

எல்லாரும் இன்புற்று வாழ்க.

---

| | | |
|---|---|---|
| 29. | தாந்திரிக த்வைத சைவ கண்டநம். (சூட்டுக் கோல் கட்டாரி புச்சம்) | 1—00 |
| 30. | மந்திரோபதேசம் 8 மந்திர உரை விளக்கம். | 0—25 |
| 31. | கீதாத் திரயம் கவி (ஈசுவர கீதை பகவத் கீதை பிரஹ்ம கீதை) | 3—00 |
| 32. | ஒன்பது துறவியர் பாடிய, திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி கவி | 1—00 |
| 33. | திரு எம் பாவை—திருப் பள்ளி எழுச்சி மணி மாலை சிறு சுடர் உரை. | 0—75 |
| 34. | திரு எம் பாவை–திருப் பள்ளி எழுச்சி பத உரை | 0—25 |
| 35. | விவேக-சூடாமணி அஞ்ஞ வதைப் பரனி கவி | 1—25 |
| 36. | சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி பரிமள தீப உரை. | 1—50 |
| 37. | திரு எம் பாவை—திருப் பள்ளி எழுச்சி கவி 30. | 0—05 |
| 38. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி 9 நூல் சேர்ந்தது | 3—00 |
| 39. | திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி நுந்தா ஒளி உரை | 0—25 |

அச்சாக வேண்டியன.

1. யுக்தி பிரகாசம் ஹிந்தி மொழி பெயர்ப்பு.
2. தர்க்க சங்கிரகம் தீபிகை உரை (தர்க்கம்)
3. சப்த பதார்த்தி, வசநம், (தர்க்கம்.)
4. சங்கர விஜய விலாசம், வசநம்.
5. கணேச கவசம், சுலோகம் பத உரை.
6. கணேச கவசம் தமிழ் கவி உரை.
7. சசி வர்ந போதம்-பதார்த்த பாஸ்கரன் உரை.
8. சமாதி விதி. 9. சந்யாச விதி
10. வேதாந்த சூடாமணி - சந்தோஷ தாயினி உரை.
11. தாயும் தலையனும் வசநம் (வேதாந்தம்.)
12. உண்மைக் கடவுள் வசநம்.
13. கைவல்ய நவநீத உதாரணக் கவி உரை.
14. ஈசுவர கீதை கவி உரை.
15. சுவாநுபவ திருவாக்கு கவி, பாக்கட்சைஸ்.
16. ஸ்திரீ புருஷ ஜநந மரண ரஹஸியம் வசநம்
17. சிவ சங்கராவதாரம், சுலோகம் உரை, வசநம்.
18. வீரசேகர ஞாந தேசிகர் சரிதம் கவி, (1500.)
19. பக்தி சதக உதாரணக் கவி உரை.
20. காணுத சித்தாந்த சந்திரிகை, வசநம் (தர்க்கம)
21. வைராக்ய தீப உதாரணக் கவி உரை.
22. விவேக சூடாமணி - சுலோகம் பத உரை, (வேதாந்தம்.)
23. மஹாத்ம சரிதாமிருத சாரம் கவி 270.

இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம், வேதாந்த மடம்,
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், இயற்றிய நூல்கள். பதிப்பித்தன.

| | | ரூ. பை |
|---|---|---|
| 1. | விசார சாகரம், வசநம், ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2—25 |
| 2. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வசநம்.,, 2—50 3. வேதாந்த சித்தாந்த முக்தாவலி, வசநம் | 0—50 |
| 4. | வியாச தாத்பரிய நிர்ணயம், வசநம், சம்ஸ்கிருதம் மொழிபெயர்ப்பு. | 0—50 |
| 5. | நைஷ்க்கர்ம்ய சித்தி, வசநம் 0—50. 6. வேதாந்த சஞ்ஞா | 0—13 |
| 7. | ஹரிமீடே - ஹரி தத்வ முக்தாவலி, வசநம் 0—75. 8. கதா சரித் சாகரம், வசநம், கதை. | 2—25 |
| 9. | ஸ்வாராஜ்ய சித்தி, வசநம் 0—25. 10. வாசிட்டம் கவி 2055 | 2—25 |
| 11. | ஈசாவாஸ்ய உபநிஷத் - சங்கர பாஷ்யம், வசநம் 0-25. 12. வைராக்ய சதக தோத்ர உரை | 0—18 |
| 13. | மண்டல பிராஹ்மண உபநிஷத் - ராஜ யோக பாஷ்யம். | 0—25 |
| 14. | வேதாந்த பரிபாஷை, வசநம் 0—44. 15. மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி | 0—50 |
| 16. | நாநா ஜீவ வாதக் கட்டளை சத்யார்த்தப் பிரகாசிகை உரை. | 2—00 |
| 17. | கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை 2—00 18. மேற்படி நக்ஷத்திர விளக்க உரை | 0—25 |
| 19. | மேற்படி குறிப்புரை 0—25. 20. கைவல்ய நவ நீதம் கவி 288. | 0—56 |
| 21. | மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை. 2—00 22. காசிகாநந்த விஜயம் வசநம் | 0—25 |
| 21. | பஞ்ச தசி கவி. 0—63. 22. பகவத் கீதை கவி 545. | 1—25 |
| 23. | பக்தி (வைராக்ய) சதகம்-பத உரை, பொழிப் புரை. | 1—50 |
| 24. | வைராக்ய தீபம் பத உரை, பொழிப் புரை | 0—50 |
| 25. | பிரஹ்ம கீதை கவி. 0—38, 26. ஈசுவர கீதை கவி. | 0—25 |
| 27. | பகவத் கீதை. 15 வது அத்தியாயம். சம்ஸ்கிருதம் தமிழ் கவி உரை மூர்க்க சதகம் பத உரை அஷ்டோத்ர சத நாமாவளி. | 0—50 |
| 28. | திருக் களர் வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் சரிதம் வசநம். | 1—00 |